# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

### சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

4-00 முதல் 4-30 வரை சுப்ரபாதம்
4-30 ,, 5-30 ,, விஸ்வரூப சர்வதரிசனம்
5-30 ,, 6-00 ,, சுத்தி முதலியவைகள்
6-00 ,, 7-00 ,, தோமால சேவை (ஆர்ஜிதம்)
7-00 ,, 7-30 ,, தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்
7-30 ,, 8-30 ,, முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்)
8-30 ,, 9-00 ,, முதல் மணி, பலி, சாத்துமுறை
9-00 ,, 1-00 மதியம் ஸர்வ தரிசனம்
1-00 ,, 2-00 ,, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி

மாலை

2-00 ,, 8-00 ,, ஸர்வ தரிசனம்
8-00 ,, 9-30 ,, சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி
9-00 ,, 10-00 ,, சுத்தி முதலிவைகள்
10-00 ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்)

### புதன் கிழமைகளில் (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

4-00 ,, 4-30 ,, சுப்ரபாதம்
4-30 ,, 5-30 ,, விஸ்வரூப ஸர்வ தரிசனம்
5-30 ,, 6-00 ,, சுத்தி முதலியவை
6-00 ,, 7-00 ,, தோமால சேவை(ஆர்ஜிதம்)
7-00 ,, 7-30 ,, தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்
7-30 ,, 8-30 ,, முதல் அர்ச்சனை(ஆர்ஜிதம்)
8-30 ,, 9-00 ,, முதல் மணி, பலி, சாத்துமுறை
9-00 ,, 10-00 ,, சஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள்
10-00 ,, 1-00 மதியம் சஹஸ்ர கலசாபிஷேகம்
1-00 ,, 2-00 ,, சுத்தி இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி

மாலை

2-00 ,, 8-00 ,, ஸர்வ தரிசனம்
8 00 ,, 9-30 ,, சுத்தி இரவு கைங்கர்யம், இரவுமணி முதலியவைகள்
9-30 ,, 10-00 ,, சுத்தி முதலியவைகள்
10-00 ஏகாந்த சேவை(ஆர்ஜிதம்)

### வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)

காலை

4-00 ,, 4-30 ,, சுப்ரபாதம்
4-30 ,, 5-30 ,, விஸ்வரூப தரிசனம்
5-30 ,, 6-00 ,, சுத்தி முதலியவை
6-00 ,, 7-00 ,, தோமாலசேவை(ஆர்ஜிதம்)
7-00 ,, 7-30 ,, தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்
7-30 ,, 8-30 ,, முதல் அர்ச்சனை,(ஆர்ஜிதம்)
8-30 ,, 9-00 ,, முதல் மணி, பலி, சாத்துமுறை
9-00 ,, 11-00 ,, சாலிம்பு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடா அலங்காரம், மணி திருப்பாவாடா கிரஹஸ்தாகளுக்கு பஹுமானம் முதலியவை,
11-00 ,, 5-00 மாலை ஸர்வ தரிசனம்
5-00 ,, 5-30 ,, சுத்தி முதலியவை
5-30 ,, 7-00 ,, பூலங்கி சார்ப்பணம்
7-00 ,, 8-00 ,, இரவுகைங்கர்யம் இரவுமணி
8-00 ,, 9-30 ,, பூலங்கி சேவை (ஆர்ஜிதம்)
9-30 ,, 10-00 ,, சுத்தி முதலியவை
10-00 ஏகாந்த சேவை(ஆர்ஜிதம்)

### வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

3-00 ,, 3-30 ,, சுப்ரபாதம்
3-30 ,, 5-00 ,, விஸ்வரூப ஸர்வ தரிசனம்
5-00 ,, 7-00 ,, சாலிம்பும், நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாந்தம்)
7-00 ,, 9-00 ,, அபிஷேகம்
9-00 ,, 11-00 ,, அபிஷேகானந்தார தரிசனம் (ஆர்ஜிதம்)
11-00 ,, 12-30 மதியம் சமர்ப்பணம்
12-30 ,, 2-00 மாலை தோமால சேவை அர்ச்சனை (தனி)மணி, பலி, சாத்துமுறை
2-00 ,, 8-00 ,, ஸர்வ தரிசனம்
8-00 ,, 9-30 ,, சுத்திஇரவு கைங்கர்யங்கள், இரவு மணி
9-30 ,, 10-00 ,, சுத்தி முதலியவை
10-00 ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்)

குறிப்பு: விழாநாட்களின்போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் மேற்கூறிய நிகழ்ச்சிநிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும்.




கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ
மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக்கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே!

—*நாச்சியார் திருமொழி.*






# ஸப்தகிரி

மலர்: 8 பிப்ரவரி 1978 இதழ் 9

தனிப்பிரதி 50 காசு.

வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:

திரு. பி. எஸ். ராஜகோபாலராஜு,

ஐ. ஏ. எஸ்.,

செயலாட்சித்தலைவர்,

தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:

திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.

தி. தி. தேவஸ்தானம்,

திருப்பதி.

அச்சிடுபவர்:

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,

மேலாளர்,

தி. தி. தேவஸ்தான அச்சகம்,

திருப்பதி.

முழு விவரங்களுக்கு,

Marketing Officer,

Publication Section,

T. T. D. Press Compound,

TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப்படம்: ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி புஷ்கரிணியில் தெப்போற்சவம்-திருப்பதி.

(அடுத்த இதழில் முடிவுறும் 'சொல்லின் செல்வன்' எனும் தொடர் கட்டுரையை இம்மாத இதழில் வெளியிட முடியவில்லை. ஆ-ர்.)

# ஆசிரியர் உரை

நம்மை நாமே அறியும் முன்பு நாம் பெற்றவர்கள் நம்மைப் பெற்றவர்களேயாம். அவர்களிடமிருந்து நாம் பெறும் அன்பிற்கும், பாசத்திற்கும் அளவில்லை, கால எல்லையில்லை. ஆனால் ஒரு கால எல்லைக்குள்தான் நாம் தந்தையிடமிருந்து ஆரம்ப அறிவை பெற முடிகின்றது. அதற்குப் பின்னர், நம்முடைய எதிர்காலத்தை கற்றறிந்த ஒரு ஆசார்யனிடம் (குருவிடம்) ஒப்படைக்கும் அவசியமான, தவிர்க்க முடியாத பொறுப்பை தந்தை மேற்கொள்ளுகின்றான். இங்கு ஒரு குருவினுடைய தேவை இன்றியமையாததாகின்றது. உலக அறிவு விரிவடைய, நம் உள்ளத்தில் உறையும் தெய்வ உணர்வுகள் செழித்தோங்க, மாதா பிதா அடுத்து, தெய்வத்தைக் காணுதற்கு முன்பு நமக்கு வழிகாட்டியாக விளங்குபவர் தக்க ஆசார்யனேயாகும். வேத காலத்திருந்தே குருவின் துணை போற்றப்பட்டு வந்துள்ளது. ஸ்வேத கேதுவுக்கு ஓர் உத்தாலகர்; மைத்ரேயிக்கு ஒரு யாக்ஞவல்கியர், பிருதவுக்கு ஒரு வருணர், நாரதருக்கு ஒரு சனத்குமாரர், இந்திரனுக்கு ஒரு பிரஜாபதி குருவாக அமைந்தனர். ஏன், பரம்பொருள் அவதாரமான கோசலையின் திருக்குமரனே வசிஷ்டரை குருவாக ஏற்றுக் கொண்டான். அவதாரத்திற்கே ஓர் ஆசார்யன் தேவை எனின், கலியுகத்தில், அன்றாடப் பிரச்னைகளாலும், குழப்பங்களாலும் சூழப்பட்டுள்ளச் சாதாரண மனிதனுக்கு ஒரு குருவின் அவசியத்தைப் பற்றிக் கூறவேண்டாம்.

ஒரு நாட்டின் மேம்பாடு அதனுடைய சமய வாழ்வை ஒட்டியே விளங்குகிறது. இவ்வகையில் நம் பாரதம் மேலை நாடுகளின் ஆன்மிகத் துறைக்கு ஒரு உதாரணமாகவும், வழிகாட்டியாகவும் விளங்குகிறது. ஆனால் இந்நிலை இன்று மாறிக்கொண்டு வருவது வருந்தத்தக்க ஒன்றாகும். இன்றைய இந்தியன், ஆன்மிகத் துறையின் அவசியத்தைக் காண முற்படுவதில்லை. ஆன்மிகப் பாதைதான், இறுதியில் நமக்கு அழிவில்லாத பேரானந்தத்தைத் தர வல்லது என்பதை எடுத்துக்காட்டி, நம்மை அப்பாதையில் அழைத்துச் செல்ல ஒரு வழிகாட்டி தேவை. அவ்வழிகாட்டிதான் இறைவனின் தூதுவராக விளங்கும் ஆசார்யனாவான். ''பக்தி ரேவ கலௌ யுகே'' என்பது சித்தாந்தம். இக்கலியுகத்தில் பக்தி ஒன்றுதான் மனிதனின் மனஅமைதிக்கு உற்ற துணையாவது. அப்பகவத் பக்தி பெறுவதற்குமுன் முதலில் ஆசார்ய பக்தி நமக்குக் கிடைத்தல் வேண்டும்.

உலகியல் வாழ்வு பெற்றிட, அதாவது வாழ் நாட்களைக் கழித்திட நமக்கு கல்வி நிறுவனங்கள் உதவி புரிந்திடலாம். நேர்மையான வாழ்க்கையை மேற்கொள்ள, மனிதனை மனிதனாக உலவச் செய்ய வேதங்களும், உபநிடதங்களும் வழிகாட்டலாம். ஆனால் தன்னுள் உறையும் பரம்பொருளின் பதம் காணச் செய்ய, மரணத்தின் முன் சரணத்தின் பெருமையை உணரச் செய்ய துணை புரிபவர்கள் வேத, சாஸ்திரங்களில் தெளிவு பெற்று, தெய்வ அருள் கிட்டிய ஆசார்ய பெருமக்களே யாவர்.

வெறும் சமய நூல்களையோ, தத்துவங்களையோ புரட்டினால் மட்டும் ஆன்மிகப்பாதை தெரிந்துவிடாது. அப்பாதையில் அடியெடுத்து, பேரொளியின் பேரருளைக் காணவேண்டுமாயின், ஆத்மாவைப்பற்றி ஆத்மானுபவமாக உணர்ந்தறிந்த, தனிமனிதனையும் பரம்பொருளையும் இணைக்கும் சங்கிலியாக விளங்கும் ஆசார்யன் ஒருவன் தேவை. அத்தகைய ஆசார்யன் யார்? எப்படி இருப்பான்? தன்னுடைய புகழுக்காகவும், பொருளுக்காகவும் மட்டுமே சித்து வேலைகள் செய்யும் மகானாக விளங்காது, பார்வையால் நம்முள் உறையும் ஆன்மிக உணர்வினை நம்பிக்கையுடன் தட்டி யெழுப்பி, வேத, உபநிடதங்களுக்கு ஒரு இலக்கியமாக விளங்கி நுண்மான் நுழைபுலம் கொண்டு, முகத்தில் தெய்வீக ஒளி பரவிட நம்மை அறியாமல் நம் கை வணங்கும் ஒரு உருவமே சிறந்த ஆசார்யனாவான். அவர் துணை வேண்டுமாயின் பக்தனுக்கு வேண்டுவது உறுதியான நம்பிக்கையும், நேர்மையும் தான். நமக்கு நம்பிக்கையூட்டும் ஆசார்யனை நாம் மானசீகமாக வழிபட்டால், ஒரு விளக்கினை ஏற்ற மற்றொரு எரியும் விளக்கு தேவை என்பதைத் தெரிந்து கொண்டு அவர்கூறும் அருட் கருத்துக்களை வேதமாக ஏற்றுக்கொண்டால், ஆன்மிக தீபம் நம் உள்ளத்தில் கொழுந்து விட்டுப் பிரகாசிக்கும். அப்பேரொளியில் அப்பரம்பொருளின் திவ்விய தரிசனம் காணப்பெறுவது உறுதி.

' ஆசார்யோ தேவோ பவா '

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

**18-12-77 அன்று திருமலையில்கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:**

ஹைதராபாத்தில் தி. தி. தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையமான பாலாஜி பவனுக்கு அடுத்து, அங்காடி நிலையம் ஒன்றினைக் கட்டுவதற்கு குழு ரூ. 75 இலட்சம் ஒதுக்கியுள்ளது.

யாத்திரிகர்களின் வசதியின் பொருட்டு தி. தி. தேவஸ்தான கோயிலான ஸ்ரீ வேதநாராயண சுவாமி வீற்றிருக்கும் நாகலாபுரத்தில் சத்திரத்துடன் இணைந்த திருமண மண்டபம் ஒன்றினைக் கட்டுதற்குக் குழு ரூ. 3,75,000/- ஒதுக்கியுள்ளது.

தி. தி. தேவஸ்தான நிறுவனத்தில் வரவேற்புத்துறை, இடவசதி ஒதுக்கீடு, 'கியூ' மற்றும் தரிசன ஏற்பாடுகள், திருமலையிலும், திருப்பதியிலும் உள்ள சுகாதாரம் ஆகியத் துறைகளில் ஆள் முறை மாற்று (Shift duty) முறையின்கீழ் பணிபுரியும் ஊழியர்களுக்கு அவர்களது அடிப்படை ஊதியத்தில் 10 சதவிகிதத்தை, அதாவது அதிகபட்சம் ரூ. 30க்கு மிகாமலும், குறைந்தபட்சம் ரூ. 15க்கு குறையாமலும், இழப்பீடு ஊதியமாக வழங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது. தன் முடிவினை அரசு ஒப்புதலுக்காக, ஆந்திர மாநில அறநிலைய ஆணையருக்கு அனுப்பியுள்ளது.

திருமலையில் மூன்றுவதாக மேலும் ஒரு வரவேற்பு அலுவலர் எனும் பதவியை ஏற்படுத்துவதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திர மாநிலம் தேவுனி கடப்பாவிலுள்ள ஸ்ரீவேங்கடேஸ்வர கல்யாண மண்டபத்திற்கு பாத்திரங்களுக்கென குழு ரூ. 10,000 வழங்குவதென்று முடிவு செய்துள்ளது.

திருமலையில் தரிசனத்திற்குப் பிறகு யாத்திரிகர்களுக்கு வழங்கும் வகையில் 104 க்வின்டால் எடையுள்ள டைமண்ட் கற்கண்டினை (Sugar Candy) வாங்குவதற்கு குழு ரூ. 90,000 ஒதுக்கியுள்ளது.

திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஜூனியர் கல்லூரிக்கான கட்டிடம் ஒன்றினைக் கட்டுதற்கு ரூ. 40 இலட்சம் குழுவினால் ஒதுக்கப்பட்டுள்ளது.

இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் ஆதரவில் 1978–79-ஆம் ஆண்டிற்கான ஸ்ரீ வேங்கடேஸ்வர ஆர்ஷ சதஸ் நிகழ்ச்சிகளை நடத்துவதற்கு தி. தி. தேவஸ்தான நிதியிலிருந்து ரூ. 1,00,000 வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திர மாநிலத்தைச் சார்ந்த கீழ் வரும் கோயில்களுக்கு, புதுப்பித்தல் பணிகளுக்காக, தலா ரூ. 15,000 வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

1. ஸ்ரீ ராமாலயம், ஞயானவரம் கிராமம், மே. கோதாவரி மாவட்டம். 2. ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில் இஞ்சேடு, கர்னூல் மாவட்டம், 3. ஸ்ரீ ராமாலயம், ஊலபல்லி, கி. கோதவரி மாவட்டம், 4. ஸ்ரீ ஜனார்தன சுவாமி கோயில், கபிலேஸ்வரம், கி. கோதாவரி மாவட்டம், 5. ஸ்ரீ ராமாலயம், வோலபல்லி, கி. கோதாவரி மாவட்டம், 6. ஸ்ரீ நீலகண்டேஸ்வர சுவாமி கோயில், குருபுரு, கி. கோதாவரி மாவட்டம், 7. ஸ்ரீ சக்தீஸ்வரசுவாமி கோயில், பீடாபுரம், கி. கோதாவரி மாவட்டம், 8. ஸ்ரீ வேணுகோபால சுவாமி கோயில், கோலங்கா, கி. கோதாவரி மாவட்டம், 9. ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில் ராயவரம் கி. கோதாவரி மாவட்டம், 10. ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயில், நரஸய்யபாளையம், பிரகாசம் மாவட்டம்,

அண்மையில் ஆந்திராவில் ஏற்பட்ட புயல் காற்றின் அழிவை நினைவிற் கொண்டு, புயற் காற்றினாலும், வெள்ளத்தாலும் பாதிக்கப்படும்போது, பொது மக்கள் தங்குவதற்குப் பயன்படும் வகையில் சிமெண்ட் காங்க்ரீட்டினால் புதிய பஜனை மந்திரங்களை கிருஷ்ணா, குண்டூர் மாவட்டங்களில் கட்டுதற்கு குழு 25 இலட்சம் ரூபாய் ஒதுக்கியுள்ளது. கட்டி முடிக்கப்படும் இப்பஜனை மந்திரங்கள் அவ்வவ் பஞ்சாயத்து சமிதி அல்லது ஜில்லா பரிஷத் பொறுப்பில் ஒப்படைக்கப்படும். மேலும் அண்மையில்விளைந்த இயற்கையின் சீற்றத்திற்கு பலியான குடும்பத்தைச் சார்ந்த ஆதரவற்ற சிறுவர், சிறுமியரை திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா பாலமந்திரத்தில் சேர்த்து பாதுகாப்பதென்றும் குழு தீர்மானித்துள்ளது.

புயல் நிவாரணமாக ஆந்திராவிற்கு ரூ. 5 இலட்சமும், தமிழ் நாட்டிற்கு ரூ. 1 இலட்சமும் குழு வழங்கியுள்ளது.

திருப்பதியில் 23–1–78 முதல் 26–1–78 வரை நடைபெற்ற தி. தி. தேவஸ்தான உந்துப் பந்தாட்டப் போட்டிக்காக (Volley–Ball Tournament) குழு ரூ. 17,500 ஒதுக்கியுள்ளது.

1978-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தின் முதல் வாரத்தில் நடைபெறவிருக்கும் தி.தி. தேவஸ்தான ஊழியர்களுக்கான வருடாந்திர விளையாட்டுப் போட்டிகளுக்கென குழு ரூ. 5,000 ஒதுக்கியுள்ளது.

தி. தி. தேவஸ்தானத்தின் புதிய காவல் அலுவலராக திரு. வி. எஸ். ஹரிதேவ் கத்கார் அவர்களை நியமிப்பதென்று குழு தீர்மானித்துள்ளது. தன் முடிவினை, அரசு ஒப்புதலுக்காக, ஆந்திரமாநில அரசுக்கு குழு தெரிவித்துள்ளது.

சென்ற ஆண்டு ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவத்தினை (மூல விக்ரகத்தினை) மிகச் சிறப்பாக வரைபவர்க்கு ரூ. 5,000 வழங்குவதாக மேலாண்மை அறிவித்திருந்தது. ஆனால் போட்டியில் பங்கெடுத்துக் கொண்ட கலைஞர்கள் வரைந்த படங்கள் எதுவும் திருப்திகரமாக அமையவில்லை. எனினும், போட்டியில் முயற்சியுடன் பங்கேற்ற திருவாளர்கள். ஆர். விஜய், எம். எஸ். திருவேங்கடம், எஸ்.ஏ. குல்கனி, சூர்யகுமார் ஆகியோர் வரைந்த இறைவனின் ஓவியங்கள் ஒவ்வொன்றையும் (நான்கினை) ரூ. 750/- வாங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

காகிநாடாவைச் சார்ந்த ஸ்ரீ பாஷ்யம் அப்பளாசார்யாலு அவர்களின் தெலுங்குத் திருப்பாவை சொற்பொழிவுகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த மசூலிப்பட்டினம் திரு.சீதாராம மூர்த்தி அவர்களின் திருப்பாவை எனும் புத்தகத்தை இரு தொகுதிகளாக தி. தி. தேவஸ்தானத்தின் வெளியீடாக வெளியிடுவதற்காக குழு ரூ. 30,000 ஒதுக்கியுள்ளது.

திருமலையில் தக்க வசதிகளுடன் கூடிய புதிய 'க்யூ' முறையினை செயற்படுத்த குழு ரூ. 57.5 இலட்சம் ஒதுக்கியுள்ளது.

# ஹயக்கிரீவ பகவான் வழிபாடு ஓர் ஆராய்ச்சி



வித்துவான், து. மோகனரங்கசாமி, M.A., B.O.L.,
வேலூர்.

ஸ்ரீமந் நாராயணனின் பலவாய அவதாரங்களுள் ஒன்முன ஹயக்கிரீவ அவதாரம் பற்றியதோர் ஆராய்ச்சியே இக்கட்டுரை.

மஹாவிஷ்ணுவை ஆதிப்பரம் பொருள் என்று கொண்ட வைணவ மதமானது வளர வளர, அதன் வளர்ச்சிக்கேற்ப அதன் கடவுட் பரி வாரங்களும் வளர்ந்தன. அவை வளரவே முக்கியமான பெரிய அவ தாரங்களேயன்றிச் சிறிய அவதாரங் களும் சிறப்பிடம் பெற்றன. அந்த அவதாரங்களைச் சுற்றிப் பலவாய புராணக் கதைகளும், வரலாறுகளும், அரிய நிகழ்ச்சிகளும் பெருகின. அந்தப் பெருக்கத்தாலே வழிபாடு களும் பலவாயின. இப்படி வந்தவற் றிலே ஒன்றுதான் ஹயக்கிரீவபகவான் வழிபாடும்.

வாணி சரஸ்வதி வாக் தேவியான அவளின் பங்கான அறிவும் ஞானமு மான தத்துவங்களை இந்தப் பரிமுகத் தேவன் புலனுக்குகின்றார். இந்த ஹயக்கிரீவ பகவான் வழிபாட்டின் பெருமையும் சிறப்பும்பற்றி அறிஞர் T. V. மகாலிங்கம் இப்படிக் கூறு கின்றார்.



# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெண்ட்,
ரமணி ஸ்டோர்ஸ்,
கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம்
சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. கே. ரங்கசாமி நாயக்கர்,
குமாரபுரம்,
நல்லை (அஞ்சல்)
கோவில்பட்டி R. S.
சாத்தூர் (வழி)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன்
கோயில் வீதி.
19—வது பிளாக்
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
35, வனப்பட்டறை வீதி,
தெப்பக்குளம்.
திருச்சி-2

திரு. வாசு வெங்கடேஸ்வரன்,
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
மெயின்பஜார், எம். ரெட்டிபட்டி,
(via) அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட்,
ஜெய்பூர் (அஞ்சல்)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

திரு. ஏ. சி. நரசிம்மன்,
9, அமுத நிலையம்,
ஜக் அக்ரஹாரம்.
ஆற்காடு (வ. ஆ. மாவட்டம்)

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. திட்டகவி. சுப்ரமண்யம்,
15,6-வது வீதி,
சுப்ரமண்யபுரம், காரைக்குடி.

திரு. ஏ. அருணாசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு. எஸ். என். கிருஷ்ணசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

இலட்சுமி புக் ஸ்டால்,
5-2-64, பாலாஜி வாடா,
பெத்தபல்லி (அஞ்சல்)
கரீம்நகர் மாவட்டம். (ஆ.பி.)

திரு. கே. எஸ். கோதண்ட
ராமய்யா, M.A., B.O.L.,.B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம்.

திரு. கே. சேஷாத்ரி,
1, தாதம் வீதி,
ஸ்ரீரங்கம் - 620006.

திரு. எச். ராமாராவ்,
3-4-207, பாக் லிங்கம் பல்லி,
காச்சிகூடா (அஞ்சல்)
ஹைதராபாத் (ஆ.பி.)

திரு. பி. விஜயேந்திரா,
நியூஸ் ஏஜண்ட்,
நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. எம். பாண்டுரங்கம்,
பாண்டு ஜெனரல் ஸ்டோர்ஸ்,
நேரு பஜார்.
மதனபள்ளி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள்
தஞ்சாவூர். [வீதி,

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபைய்யா பேட்டை,
சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. எச், என். இலட்சுமி
நரசிம்மைய்யா,
A 106, பெல் காலனி
ஜலஹல்லி (அஞ்சல்)
பெங்களூர்-13.

திரு. எம். பாலசுப்ரமண்யம்
நாகுல் கட்டா வீதி,
தாடிபத்திரி,
அனந்தபூர் மாவட்டம்.

திரு. எஸ். மெங்கதால்,
3, ரங்கநாதபுரம் தெரு,
அவனாசி.

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

"ஹயக்கிரீவ பகவான் பற்றிய தத்துவமும் வழிபாடும், இந்தியாவிலேயே பௌத்தர்களாலேகூட ஏற்றுக் கொள்ளப்பட்டதும், இங்கிருந்து அவை சீனு, ஜப்பான் போன்ற நாடுகளுக்கும் சென்று பரவியதுமே இந்த வழிபாட்டின் மேன்மையைப் புலப்படுத்தும் சிறப்பாகும்".

"A speciality of the concept and cult of Hayagriva is its acceptance by the Buddhists in India, and its migration to such lands as China and Japan".

என்று குறித்து அவர்மேலும் அடிக் குறிப்பில் இவ்வாறு மேற்கோள் காட்டுகின்றார்;

"Hayagriva is one of the Kwan-Zins enumerated and represented in art in China and Japan particularly in the latter." (see Encyclopaedia of Religion and Ethics. Vol. VII. 1908. p: 764.)

"He is depicted as horse-headed two-tusked and with eight arms, two of which hold a Vajra and lotus.... only one of the thirty three temples gives the place of honour to him".

என்று இன்னவாறெல்லாம் அறிஞர்கள் ஹயக்கிரீவ பகவானின் வழிபாட்டை விதந்தோதுகின்றார்கள் என்றாலும், இந்த வழிபாட்டின் வரலாற்றை அல்லது வளர்ந்த விதத்தை ஆயும்போது நாம் சில புதிய செய்திகளையும் பெறத்தான் செய்கின்றோம்.

நமது இந்த ஆராய்ச்சிக்குக் கல்வெட்டோ புதைபொருள்களோ சான்றாகக் கிடைத்தாலும், பெரிதும் இந்த நாட்டுப் பலவாய புராணங்களே நமக்குத் துணையாகின்றன.

பாகவத புராணம் (V: 18: 1-6) பத்ரஸ்ரவஸ் வழிபட்டபோது அவனுக்கு ஹரியானவர் தந்த தரிசனமே ஹயசீர்சா எனும் ஹயக்கிரீவ வடிவம் என்றும், (XI. 4.17) ரசாதலம்போய்ப் புகுந்த அசுரனை மதுவிடமிருந்து பகவான் மீட்டுப் பிரமனிடம் தந்த வடிவமே இந்த வடிவம் என்றும் கூறுகின்றது.

ஹயக்கிரீவ வடிவமே, காஞ்சிபுரத்தில் அகத்தியருக்குச் சங்கு சக்கரம் அக்ஷவலயம் நூற்சுவடியோடு பகவான் காட்சி தந்த வடிவம் என்றும், (IV.

5,9; 35-40), சுதலத்தில் உறைகின்ற திருவடிவம் என்றும், (II. 20.21.) பிரம்மாண்ட புராணம் கூறுகின்றது. இதையே வாயு புராணமும் (50,20) கூறுகின்றது.

மேலும், அதே வடிவமைதிபற்றிக் கூறுங்காலை ஹயக்கிரீவன் என்பான் தனுவின் மகன் என்றும், இந்திரனை எதிர்த்து நிகழ்த்திய போரில் விருத்திராசுரனுடன் கலந்துகொண்டு போர் உடற்றியவன் என்றும், மஹாபலிச் சக்கரவர்த்தியின் அன்பர்களிலே ஒருவன் என்றும் பாகவத புராணமும் (VI.6.30; 10.19; VII. 2.4; VIII. 10.21;) வாயு புராணமும் பேசுகின்றன. ஹயக்கிரீவன் எனும் பெயரோடு தாரகாமயத்தின் ஒரு தானவன் இருந்தான் என்று மத்ஸ்ய புராணம் (173.15; 177.6) கூறுகின்றது. பிராக் ஜோதிஷத்தில் கிருஷ்ணனால் கொலையுண்ட இந்தப் பேரோடு கூடிய ஓர் அசுரனைப்பற்றி விஷ்ணு புராணம் (V. 29. 19) பேசுகின்றது.

ஹயக்கிரீவ என்றால் என்ன பொருளோ அதே குதிரை முகம், பரி முகம் என்னும் பொருளைத் தரும் ஹயசிரஸ் என்னும் பெயரோடு தொடர்பு படுத்தி, வைஸ்வாநரனின் மகளும், கிராதுவின் மனைவியுமான ஒருத்தியைப்பற்றிப் பாகவத புராணமும் (VI, 6:33-34), சிராத்தர்க்கு உவப்பான ஒரு புண்ணிய தீர்த்தம் பற்றிப் பிராம்மண்ட புராணமும் (III. 13.46) வாயு புராணமும் (77.46), இதே பேரிலிருந்த சுவர்பானுவின் ஒரு மகளைப்பற்றி விஷ்ணு புராணமும் (I. 21.7) விந்தையான செய்திகள் தருகின்றன.

ஹயசிர்சா, பிரம்மாவின் யாகத்திலே தோன்றியதோர் விஷ்ணு அவதாரம் என்று பாகவத புராணமும் (II. 7.11), அவருக்கு ஹயானனன் எனும்பேரும் உண்டு என்று பிரம்மாண்ட புராணமும் (IV. 6.1) கூறும்.

ஹய என்பது சந்திரன் தேரின் பத்துப் புரவிகளிலே ஒன்று என்றும், சதஜித்தின் மூன்று மகன்களிலே ஒருவன் என்றும், கண்ணனால் கொலைப் பட்டவன் என்றும், சாதியார் என்றும், ஓரினத்தார் என்றும், பிரம்மாண்ட புராணமும் (II, 23.56) மத்ஸ்ய புராணமும் (126.52) வாயு புராணமும் (52.53) கூறுகின்றன.

இந்த ஹயக்கிரீவ பகவான் வழிபாடு பெரிதும் வழக்கில் உள்ள அஸ்ஸாம் மாநிலத்தைச் சேர்ந்தவரான அறிஞர் மகேஸ்வர் நியோக் இதைப்பற்றி எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரையும் சில அரிய செய்திகளைத் தருகின்றது. ஒரு சில காணலாம்.

“காமரூபத்தில், மாதவன் என்னும் விஷ்ணுவின் பல வெளிப்பாடுகளைக் குறித்தும், எந்தெந்த இடங்களிலே எந்தெந்தத் தோற்றங்களை வழிபட வேண்டும் என்றும், இடங்களின் பெயர்கள் இன்னவை என்றும், சுட்டிக் காட்டுகிறது வடமொழியில் உள்ள காளிகா புராணம்”.

“லௌஹித்யா நதி என்னும் பிரம்மபுத்திரா நதியானது மணிகூட மலைக் குன்றுகளின் இடையே இன்றளவும் பாய்வதும், அந்த மலையும் இன்றளவும் அதே பெயராலேயே விளங்குவதும், கந்தமாதனம் எனும் அதன் பேரின் திரிபாக இன்று கொந்தமாவ் என்ற பேரோடு, இன்றைய கௌஹாத்திக்குப் பதினைந்து கல் வடமேற்கே உள்ள ஹாஜோவில் இன்றும் அது வழங்கப்படுவதும் காண்க”.

என்று கூறும் அவர், ஹயக்கிரீவ பகவானின் அவதாரத்தலம் அஸ்ஸாம் பகுதியே என்பதை மேலும் விளக்குகின்றார்:

“பகவான் விஷ்ணுவானவர், ஹயக்கிரீவ (குதிரை முக) வடிவிலே, காய்ச்சலால் தாக்குண்டார் என்பதும், பிறகு அவர் அந்த ஜுவராசுரனை (காய்ச்சல் அரக்கனை)க் கொன்றழித்தார் என்பதும், நலம் எய்தியதன் காரணமாக அங்கே அணித்தேயிருந்த பொய்கையில் அவர் குளித்தார் என்பதும் ஆகிய இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் இந்த மணிகூட மலையில் நிகழ்ந்தவையே. அதனால்தான் பகவானும், இந்த மலையே தமது சொந்த மலையாகக் கொண்டு நல்லோராய் விளங்கும் பக்தர்களுக்கும், அசுரர்களுக்கும், தேவர்களுக்கும் அருள் பாலிக்கின்றார் என்பதும், அவர் திருமுழுக்காடிய திருக்குளத்திற்கு “மீண்டும் பிறவா நெறி பயப்பது” எனும் பொருளதான “அபுனர்பவா” எனும் பெயர் வழங்கலாயிற்று என்பதும், அத்திருக்குளத்தில் ஒரு முறை மூழ்கி எழுந்தோரின் பிறவித்தளைகள் எல்லாம் அற்று, அவற்றிற்கோர் முற்றுப் புள்ளி இடப்பெறும் என்பதும் பிறவும் காளிகாபுராணம் கூறும் மிக அரிய செய்திகள். (81.77. அடிக் குறிப்பு)’

பிரம்மபுத்திராவும் விருத்தகங்காவும் வந்து கூடும் இடமான விஸ்வநாத கட்டத்தில், சிவ விஸ்வநாதர் ஆலயம் இருந்தது என்றும் இங்கேதான் உலக முதல்வனான ஜகத்பதி, ஹயக்கிரீவனோடு (அரக்கனோ?) போரிட்டு அவனைக் கொன்றழித்த பின் மணிகூடம் திரும்பி வந்தார் என்றும் கூறுகிறது ஒரு செய்தி. இந்த நூற்பகுதியிலேயிருந்து, “ஜகத்பதி” என்னும் சொல் சிவனைக் குறிக்கிறதா, விஷ்ணுவைக் குறிக்கிறதா என்று சொல்ல முடியவில்லை. இத்தோடு கேதாரன் என்னும் பேரோடு சிவன், ஹாஜோவில் (காகதி. 72) திருக்கோயில் கொண்டுள்ளமையும் காண்கின்றோம்.

பெரும்பாலான நூல்களும் புராணங்களும் ஹயக்கிரீவ பகவானுக்கு இன்றைய அஸ்ஸாம் மாநிலப் பகுதியையே சிறப்பிடமாகக் கூறக் காண்கின்றோம். யோகினி தந்திரம் எனும் வட மொழி நூலுங்கூட (2.9.123)ப் பகவான் விஷ்ணுவானவர் ஹயக்கிரீவ வடிவத்தோடே மணிகூட மலையில் வாசம் செய்கின்றார் என்று கூறுகின்றது.

ஹயக்கிரீவர் பற்றிய முற்காலத்தனவும், பிறவுமான புராணங்களுக்குள்ளே, ஹயக்கிரீவ வடிவத்தோடு

**(35 ஆம் பக்கம் பார்க்க)**

# ஆழ்வார்களும் திருக்குறளும்

வித்துவான். ரா. கண்ணன்,
சென்னை-14.

அமிழ்தினும் இனிய தமிழ்மொழியில் அருமறை நூல் விரித்த திருவள்ளுவர் பெருமான் சான்றோர் தலைவர். அவர் சொற்களும் கருத்துக்களும் பின்னர் தோன்றிய சான்றோர் கவிஞர் பலரையும் ஈர்த்துள்ளன. சமயச் சார்புடைய சான்றோர்களும் இதற்கு விலக்கல்லர்.

திருமால் வழிபாட்டினரான ஆழ்வார்கள் பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடுபவர்கள். இறைவனிடத்து, அவன் குணங்களிடத்து ஈடுபடுதலும், அவனுக்குத் தொண்டு புரிய அவாவுதலுமே அவர்கள் குறிக்கோள். பிறநூல் சொற்களையும் பொருள்களையும் தங்கள் அருளிச் செயல்களுள் குறிக்க வேண்டும் என்ற குறிக்கோளுடையர் அல்லர். அப்படி இருந்தும் ஆழ்வார்கள் அருளிய நாலாயிரத் திவ்ய பிரபந்தத்தில் திருக்குறள் சொற்களும் கருத்துகளும் மிளிர்ந்து ஒளியுமிழ்ந்து மகிழ்ச்சி யூட்டுவதைக் காணலாம். அவைகளுள் சிலவற்றை இங்கு நுகர்வோம்.

திருமாலுக்குப் பல்லாண்டு பாடிப் பெருமையுற்ற பெரியாழ்வார் கண்ணன் கழலிணையே எண்ணும் திண்மை உடையவர். இனிய எளிய நெஞ்சுருக்கும், செஞ்சொற்களாலான அவரது அருளிச் செயல் முழுதும் கண்ணன் பிள்ளைத் தமிழ். அமிழ்தினும் ஆற்ற இனியது; உயிர்க்கு உறுதுணையாகும் மறைமொழியாம் மேம்பாடுடையது.

கண்ணன் பச்சிளங் குழவி. ஒரு முலையை வாய் மடுத்து ஒரு முலையை நெருடிக் கொண்டு, மூக்குறிஞ்சி, திளைத்துதைத்து முலையுண்ணும் பருவம். உலகில் பிறந்த யாரும் பெறாத பெரும் பேறு பெற்ற யசோதைப் பிராட்டி பிறப்பிலியாம் பெருமானுக்கு முலையூட்டுகிறாள். தாயர் எல்லாருக்கும் இயல்பாக எழும் ஏக்கத்தை, வேட்கையை உள்ளங்கொண்டு மாதவனுக்கு முலையூட்டுகிறாள். தாயர்களுக்கெல்லாம் தலைமகள் அல்லவா? பெண்டிர் வாழ்வார் கண்ணன் ஒப்பாரைப் பெறுதும் என்னும் ஆசையாலே கண்டவர்கள் போக்கொழிந்தனராம். ஆகையால் அவர் நினைப்பதை மற்றத் தாய்மார்களும் நினைக்க வேண்டுமல்லவா?

யசோதையாகிய பெரியாழ்வார் நினைப்பதைப் பாருங்கள்.

'' மின்னனைய நுண்ணிடையார் விரி
குழல்மேல் நுழைந்த வண்டு,
இன்னிசைக்கும் வில்லிபுத்தூர் இனி
தமர்ந்தாய், உன்னைக் கண்டார்
என்ன நோன்பு நோற்றாள்கொலோ
இவனைப்பெற்ற வயிறுடையாள்
என்னும் வார்த்தை எய்துவித்த
இருடீகேசா முலையுணாயே''

இவனைப் பெறுதற்கு என்ன தவம் - என்ன நோன்பு நோற்றாளோ என்று மற்ற பெண்டிர் வியக்கின்ற பெருமையை - புகழார்ந்த வார்த்தையை கண்ணன் அவளுக்குத் தந்தான் என்கிறார். பெற்ற வயிற்றுக்கு ஏற்றம் வயிறுடையாள் என்பதால்! அந்த வயிறு மணி வயிறு. அந்த வயிற்றில் வளரும் மணிக் குழவி புகழொளியுமிழும் அறிவார்ந்து நிலைக்க, இடையறாது-அழுத்தமாக நினைக்கின்றாள் தாய். குழவிப் பருவத்திலேயே- முளைக்கும் நிலையிலேயே வீறுபெறுகின்ற நினைப்பு!

இதே கருத்தினை, சொற்களைத் திருக்குறளில் காண்கிறோம்.

'' மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி
இவன் தந்தை
என்னோற்றான் கொல் எனுஞ்சொல்''

"அறிவு திரு ஒழுக்கங்களால் நிறைந்த இப்பீடுடை மகனைப் பெறுதற்கு இவன் தந்தை என்ன தவம் செய்தான் கொல்லோ'' என்னும் புகழார்ந்த சொல்லை தந்தை பெற்று மகிழுமாறு செய்ய வேண்டியது மகனாற்றும் உதவி என்கிறார் திருவள்ளுவர்.

ஆழ்வார் பாசுரத்தில் தந்தை இடத்தைத் தாய் பெறுகிறாள்! ஈன்ற பொழுதில் பெரிதுவப்பவள் தாயே யன்றோ?

'திருமால்தான் கண்ணன்; வலம்புரியே வேய்ங்குழல்' என்ற கருத்துப் பட ஆழ்வார்,

'' தூவலம் புரியுடைய திருமால்
தூயவாயிற் குழலோசை வழியே''

என்று அடுத்து அருளிச் செய்கிறார். அந்தக் குழலோசையின் சிறப்பையெல்லாம் விளக்குகின்றார்.

சிறு விரல்கள் தடவிப் பரிமாறவும், செங்கண் கோடச் செய்யவாய் கொப்பளிப்பவும், குறுவெயர் புருவம் கூடலிப்பக் கோவிந்தன் குழல் கொண்டு ஊதினபோது பறவையின் கணங்கள் கூடு துறந்து வந்து சூழ்ந்து படுகாடு கிடந்தன. கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக் கவிழ்ந் திறங்கி செவியாட்டாது நின்றன. மான் கணங்கள் மேய்கை மறந்து, மேய்ந்த புல்லும் கடைவாய் வழி சோர, இரண்டு பாடும் துலங்காப் புடை பெயராமல் எழுது சித்திரங்கள் போல நின்றன.

கோவலர் சிறுமியர் இளங்கொங்கை குதூகலிப்ப, தேனளவு மலர்க் கூந்தல் அவிழ, உடை நெகிழ, ஓர் கையால் துகில் பற்றி, ஒல்கி, காவலும் கடந்து சென்னி வேர்ப்பச் செவி சேர்த்து நின்றனர்.

மேனகையோடு திலோத்தமை அரம்பை உருப்பசியவர் வெள்கி மயங்கி வானகம் படியில் வாய் திறப் பின்றி ஆடல் பாடலவை மாறினர்.

நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனும் தம்தம் வீணை மறந்தனர். கின்னரரும் கின்னரம் தொடுகிலோ மென்றனர்.

அருங்கல உருவின் ஆயர் பெருமான் குழலூதினபோது இவைதானு நேர்ந்தன? ஓரறிவு உயிரான மரங்களும் நின்று மது தாரைகள் பாயும்; மலர்கள் வீழும்; வளர் கொம்புகள் தாழும்; திருமால் நின்ற பக்கம் நோக்கி அவை இரங்கும் கூம்பும்! அவை செய்யும் குணம் இருந்தவாறு என்னே!

இந்த நிலையில் நாகத் தணையான் குழலோசை அமரலோகத்தளவும் சென்றிசைப்ப வானவரெல்லாம் அவியுணு மறந்தனர்; ஆயர்பாடி நிறையப் புகுந்தீண்டினர். குழலோசையைச் செவியுள் கண்டனர்; மகிழ்ந்தனர்; கோவிந்தனைத் தொடர்ந்து என்றும் விடாது நின்றனர்.

இந்த அற்புதத்தை ஆழ்வார்,

'' புவியுள் நான்கண்டதோர் அற்புதங் கேளீர்!
பூணிமேய்க்கும் இளங்கோவலர் கூட்டத்து
அவையுள், நாகத்தணையான் குழலூத
அமரலோகத் தளவுஞ் சென்றி சைப்ப,
அவியுணு மறந்து வானவ ரெல்லாம்
ஆயர்பாடி நிறையப் புகுந்தீண்டி,
செவியுள் நாவின் சுவைகொண்டு மகிழ்ந்து
கோவிந்தனைத் தொடர்ந்தென்றும் விடாரே,''

என்று அருளிச் செய்கின்றார். செவி பெற்றதனால் பெற்ற பெருஞ்செல்வத்தினைப் பேசும் ஆழ்வார் திருப்பாசுர ஓசையிலே,

'' செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்''

என்ற திருக்குறள் ஒலிப்பதை உணர்ந்து மகிழலாம் அன்றோ? கண்ணன் குழலோசை கேளாதார் சாவினும் வாழினும் என்? என்பதும் பெறப்படும் அன்றோ? 

"குலம் தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயினவெல்லாம்
நிலந்தரம் செய்யும்; நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்;
வலந்தரும் மற்றும் தந்திடும்; பெற்ற
தாயினும் ஆயினசெய்யும்
நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்!"

—திருமங்கை மன்னன்.

*மக்கள் உள்ளங்களில் ஸர்வ சாட்சியாக இருந்து பட்சபாதமில்லாமல் அருள் செய்ய முற்படுகிறான் என்ற மகத்தான உண்மைக்கு ஒரு நினைவுக் குறி நாராயணா என்ற திருநாமம்.*

*தவங்களில் நம்பிக்கையில்லாதவரானாலும் கடவுளைக் காண்பதற்கு அன்பிலே ஐம்புலன்களை அடக்க வேண்டும் என்கிறார். நாளடைவில் பக்திக் காதல் முதிர்ந்ததும் பாம்போடு ஒரு கூரையில் பழகுவதுபோல் தோன்றிருக்க வேண்டும் அவர் வாழ்க்கை. அந்நிலையில் "அற்றேன் வந்தடைந்தேன்; அடியேனை ஆட்கொண்டருளே!" என்று சரணாகதி தத்துவத்தின் எல்லையைத் தொடுகிறார் கொற்ற வேற்பரகாலன்.*

*ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை இவ்வாழ்வாரை கூறும்பொழுது உடம்பை நிழலிலே வைத்து ஆத்மாவை வெய்யிலிலே வைத்து மோனத்தவமியற்றியவர் என்று கூறுகிறார்.*

*தொழிந்தேன், உடம்பெலாம் கண்ணநீர் சோர, நள்ளிருளளவும் பகலும் நான் அழைப்பன், நாராயணா என்னும் நாமம்' என்று பாசுரமாக வெளிவருகிறது. பட்டமரம் தழைப்பது போலத் தழைக்கிறது வாடி வருந்திக் கிடந்த உள்ளம். திடீரென்று ஒளி வீசும் ஞானச்சுடர்,*

"நன்றுநான் உய்ய நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்"

*என்று குதூகலமாகப் பாட வைக்கிறது.*

*வகுளாபரணபட்டர் என்பவர், "சுழி பொறித்த நீர்ப் பொன்னித் தென்னரங்கன் தன்னை வழி பறித்த வாளன் வலி" என்று திருமங்கை*

# "மாறன் தமிழ் மறை நான்கிற்கும் ஆறு அங்கம்"

*அமுதம் போன்ற இத்திருநாமம் கொடுவினைகளுக்கு கொடிய விஷம் என்று உறுதி கூறி, ஒரு சொல், ஒரு மந்திரம் நாராயணா வென்று பறை சாற்றுகிறார், திருமங்கை மன்னர்.*

*நம்மாழ்வார் இயற்றிய நாலு பிரபந்தங்களையும் நான்கு வேதங்கள் என்று கொண்டாடும் வைஷ்ணவர்கள் ஆலிநாடன் இயற்றிய ஆறு பிரபந்தங்களையும் அந்த வேதங்களின் ஆறு அங்கங்கள் என்று கூறுகிறார்கள். வேதம் தமிழ் செய்த மாறனைப்போல் இவரும் அந்நாளில் கல்விக்களஞ்சியமாக விளங்கினார். எண்பத்தாறு விஷ்ணு ஸ்தலங்களுக்குச் சென்று இயன்ற கைங்கர்யம் செய்து பாகவத தர்மத்தை நாடெங்கும் பிரகாசிக்கச் செய்தார். இவருக்கு அடுத்தபடியாக, அதிக ஸ்தலங்களைப் பாடிய நம்மாழ்வார் முப்பத்தைந்து ஸ்தலங்களைத்தான் பாடியிருக்கிறார். கடுந்*

"ஓடினேன்; ஓடி, உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன்; நாடி, நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்"

—திருமங்கை மன்னன்.

---

திரு. கே. வி. இராஜன்,
மதுரை.

---

*கழிந்த காலத்தை நினைத்து வாடிக் கிடந்தவர், குமுதவல்லியின் காதலிலும் சாந்தி பெறாது, வாடி வருந்தி, அவள் சுட்டிக்காட்டிய பக்திக்காதல் நெறியிலேதான் ஆறுதல் பெற்றார். பழுதே பல பகலும் போயின என்று அஞ்சி அழுதேன் என்று பொய்கை பிரானைப்போல் வடித்துக் கொண்டிருந்த கண்ணீர் அப்படியே தோய்ந்து 'உள்ளெலாம் உருகிக் குரல் தழுத்*

*மன்னனின் ஆத்ம வீரத்தை அழகாக வாழ்த்துகிறார். திருமாலின், பஞ்சாயுதங்களின் ஒன்றான வில்லின் அம்சமாய் அவதரித்த இவர் ஓர் சிறந்த ஞான வீரர். திருவரங்கத்து நந்தவனத்தை வளர்த்துக் கொண்டிருக்கும் ஒரு பெரியவர், குடிசைக்கு வெளியில் மாலை கட்டிக் கொண்டிருந்தார். அவரைப்பற்றி நன்கு கேள்விப்பட்ட அரசன், அவர் அருகில் சென்று நமஸ்கரித்து நின்றார். அந்தக்கிழவர் தொண்டரடி பொடியாழ்வார் தான் தம்முடைய உருக்கமான பாடல்களால் திருமங்கை மன்னன் உள்ளத்திலே அரங்கனின் மகிமைகளை பிரகாசிக்கச் செய்தார்.*

*தெற்கே ஆழ்வார் திருநகரி என்ற நம்மாழ்வாரின் ஸ்தலம் பிரசித்தமாயிருப்பதுபோல் திருமங்கை மன்னனின் திருநகரியும் பிரசித்தமானது. ஆலி நாடனை கள்வர் மரபினன்*

என்று கூறுவதுண்டு. ''கள்வனேன் ஆனேன்'' என்று இவர் கூறும் கூற்றி லிருந்து செய்து கொண்ட சர்ச்சை அல்ல இது. பல்லவர்களின் தென் னட்டு ஆதிக்கத்திற்கு ஒரு முக்கிய காரணம் முத்தரையர் என்ற கள்வர் மரபினரின் பேருதவியாகும். ஆராய்ச்சி பேரறிஞரான திரு. மு. இராகவையங் காரின் அபிப்பிராயம் திருமங்கை மன்னன் முத்தரையர் மரபைச்சார்ந்த கள்வர் குலத்தவர் என்பதாகும்.

வடதேசயாத்திரையை மேற் கொண்ட இம்மன்னன் இமயமலையைச் சார்ந்துள்ள பல க்ஷேத்திரங்களை நேரில் தரிசித்திருக்கக்கூடும். அல் மோராவிலிருந்து 135 மைல் தொலை விலிருக்கும் நந்த பிரயாகையை இவர் ''பிரிதி'' என்று குறிப்பிடுவதாய் காஞ்சி மகாவித்வான் ஸ்ரீ அண்ணங் கராச்சாரியார் கூறுவர். பத்ரிகாச் ரமம், நைமிசாரணியம், அயோத்தி, வடமதுரை முதலிய திருப்பதிகளை தரிசித்தும், இவரை அகோபிலம் ஜாஸ்தி ஆகர்ஷித்தது என்றுதான் சொல்ல வேண்டும்.

'' மலைத்த செல் சாத்து
  எறிந்த பூசல்
வன்துடி வாய் கடுப்ப
  சிலைக்கை வேடர்
தெழிப்பு அருத
  சிங்க வேழ்குன்றமே''

என்று அகோபிலத்தின் ஸ்தல மகிமை யைக் கூறுகிறர். அகோபிலத்துக்கு போகும் வழி ஆழ்வார் காலத்தில், கொடிய காடாக வருணிக்கப்படு கிறது. கல்லும், முள்ளும், புதரும் அடர்ந்த கானகம் எங்கள் நரசிங்க மூர்த்திக்கு இசைவான இடம்தான் என்று மகிழ்ந்து போகிறது திருமங்கை மன்னனின் திருவுள்ளம். ஜீவஹிம் சையின் காரணமாயுள்ள இரண்யனை திருத்த முடியாமல், அவன் நெஞ்சை கிழித்து திருத்திய நரசிம்மத்திற்கு உரிய ஸ்தலம் இந்த இடம்தான்.

'' ஓய்ந்த மாவும்
  உடைந்த குன்றும்
அன்றியும் நின்று அழலால்
  தேய்ந்த வேயும்
அல்லது இல்லாச்
  சிங்கவேழ் குன்றமே''

தமது பரிவாரத்துடன் தீர்த்த யாத்திரை செய்து கொண்டு போகும் திருமங்கை மன்னன் ''எப்போதும் இங்கே கோடைதானு,'' கொழுத்த வெயில் தானு, எப்பொழுதும் சுழற் காற்று வீசுகிறதே, வழியிலே காட்டு நாய்கள், தலைக்கு மேலே கழுகுகள் வட்டமிடுகின்றனவே, இந்தக் கரடு முரடான பாதையில் மனிதர்கள் எப் படி போக முடியும்! என்று அதிசயிக் கிறர். நரசிம்ம மூர்த்திக்கு ஏற்ற கோயில்தான், சிங்கவேழ் குன்றத்து சிங்கப் பெருமாள் என்ன சாதுவா என்று நினைத்துக் கொள்ளுகிறர்.

பரகாலன் சித்தரிக்கும் நரசிங்க மூர்த்தியை சற்று கண்டுகளிக்க வேண் டும். தேவர்களைக் காக்க அந்த அரண் மனைத்தூண், பத்துமாத கர்ப்பத்திலே சுமந்து பெற்றிருக்கும் தாய்போல் பெற்றிருக்கிறது இந்த அருமையான சிங்கப்பிள்ளையை! சிங்கவேழ் குன்றத் தின் வெப்பத்தை நினைக்கும்பொழுது, எரிந்த கண்களும், பிளந்த வாயும், கோரமான பற்களும் உள்ள நரசிங்கம் தோன்றியதும் எல்லோரும் கால் தடு மாறி ஓடுகிறர்களாம். அது சிங்க உருவம்தானு என்று பார்க்காமல் கலங்கி ஓடுகின்றனர். அந்த நரசிங் கத்தின் சீற்ற வெந்தியே இங்கும் பரவி இந்த கற்களையும் வேகச் செய்கின் றனவோ என்று தோன்றுகிறதாம்.

இத்தகைய சூழ்நிலையில் வீற்றிருக் கும் சிங்கப் பெருமாளை, நம்பெருமாள் என்று கூறுவதுடன் திருப்தி அடை யாமல் நம்முடைய நம் பெருமாள் என்று பேசுகிறர். இவர் கண்ட

(31-ம் பக்கம் பார்க்க)

தொடர் கட்டுரை

# கீதை காட்டும் நல்வழி



அத்தியாயம் – 9

ராஜ வித்யா ராஜ குஹ்ய யோகம்

பகுதி — 4

ஹிந்து மதத்திற்கு தனிச் சிறப்பு ஒன்று உண்டு. எந்தெந்த வடிவில் எப்படி எப்படி இறைவனை நாம் வழிபட்டாலும் அவை அனைத்தும் ஒரே இறைவனையே சென்று அடைகின்றன என்பதுவே அதுவாகும். இது எப்படி சாத்தியமாகும் என்ற சந்தேகத்தை பகவான் தெளிவாக விளக்குகிறார்.

எல்லாம் பரம்பொருளே என்பது அத்வைதக் கொள்கை. இதைப் பகவான் கீழ்க்காணும் சுலோகங்களில் தெரிவிக்கின்றார்.

**அஹம் க்ரதுரஹம் யக்ஞ:**
**ஸ்வதாஹமஹமௌஷதம்|**
**மந்த்ரோஹமஹ மே வாஜ்யம்**
**அஹமக்னிரஹம் ஹுதம் ||16||**

'நானே கிரது என்ற வைதிக கர்மம், யக்ஞம் நானே. (பித்ருக்களுக்குப் படைக்கப்படும் உணவாகிய) ஸ்வதாவும் நானே. (மருந்தாகவும் உணவாகவும் பயன்படும்) ஔஷதம் நானே. மந்திரமாவது நானே. ஹோமம் செய்யப்படும் நெய்யும் நான். அக்னிநான். வேள்வியும் நானே'

**मननात् त्रायते इति मन्त्रः** மனனம் செய்வதால் அதாவது திரும்பத்திரும்ப உணர்ந்து உச்சரிப்பதால் எது நம்மைக் காக்கிறதோ அது மந்திரம் ஆகிறது. ஒவ்வொரு வார்த்தைக்கும் பிரத்தியேக சக்தி உண்டு. ஒருவரை நாம் 'கழுதை' என்றோ 'முட்டாள்' என்றோ சொல்லிவிட்டால் அவருக்கு எவ்வளவு கோபம் வருகிறது! அது வெறும் வார்த்தை தானே! இத்தகைய சாதாரண வார்த்தைகளுக்கே இவ்வளவு சக்தி இருக்கிறது என்றால் 'ராம', 'கிருஷ்ண' போன்ற தெய்வீக வார்த்தைகளுக்கு எவ்வளவு சக்தி இருக்கும். "Name and Nami are inseparable"– பெயரும் பெயரை உடையவரும் பிரிக்கப்பட முடியாதவை என்பது குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் வாக்கு. அத்தகைய மகிமை வாய்ந்த மந்திரங்கள் பகவானேயன்றி வேறல்ல

வியாதிகள் பல்வகையில் மனிதர்களைப் பீடிக்கின்றன. வியாதிகளைக் குணப்படுத்த எத்தனை எத்தனையோ சிகிச்சை முறைகள் உள்ளன. ஆங்கிலத்தில் இவற்றை Allopathy, Homeopathy, Chromopathy, Naturopathy என்றெல்லாம் அழைப்பார்கள். இவற்றிற்கெல்லாம் மேலானதாக மற்றொரு சிகிச்சை முறை உண்டு என்கிறார் ஸ்ரீ சுவாமி சிவானந்தர். மற்ற எல்லா முறைகளும் கைவிட்ட நிலையில் இந்த முறையைத் தான் ஒருவன் இறுதியில் அடைக்கலம் புகவேண்டும். அது நிச்சயம் அவனைக் காப்பாற்றும். இத்தகைய அரிய சிகிச்சை முறை எது? அதை அவர் 'Namapathy' என்றழைக்கிறார். இறைவனது நாமத்தைப் பக்தியுடன் உச்சரித்தாலே Namapathy ஆகிறது. ஔஷதங்களிலெல்லாம் மிகச் சிறந்தது, சக்தி வாய்ந்தது பகவன் நாமமே. டாக்டர்கள் அனைவரும் கைவிட்ட நிலையில் மனமுருகிச் செய்யும் பிரார்த்தனை நம்மைக் கண்டிப்பாகக் காப்பாற்றுகிறது.

இந்தக் கருத்தை கீழ்க்காணும் ஒரு அரிய சமஸ்கிருத சுலோகம் விளக்குகிறது:

**"यावत्वित्तोपार्जनसक्तो तावन्निजपरिवारोरक्तः"**
**अच्युतानन्द गोविन्द नामोच्चारण येबजात् ।**

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் "சமய ஜோதி" மதுரை.

'அச்யுதா! அனந்தா! கோவிந்தா! என்ற பகவன் நாமங்களாகிய அருமருந்தைப் பக்தியுடன் உச்சரிப்பதன் மூலம் அனைத்து வியாதிகளும் குணமடைகின்றன. இது உண்மை, உண்மை, உண்மை''

பகவான் மேலும் சொல்கிறார்:

"இந்தப் பிரபஞ்சத்தின் தந்தை தாய் பாட்டனுரானவனும், கர்ம பலனைக் கொடுப்பவனும், அறியத்தக்கவனும், தூய்மை செய்பவனும், ஓங்காரம் ஆனவனும், ரிக், ஸாம,






யஜுர் வேதங்களாக ஆனவனும் நானே.

புகலிடம், வளர்ப்பவன், உடையவன், இருப்பிடம், அடைக்கலம், தோழன், பிறப்பிடம், ஒடுங்குமிடம் தங்குமிடம், களஞ்சியம், அழியாத வித்து அனைத்தும் நானே''

நாம் யாரை யாரையெல்லாமோ நம்பி மோசம் போகிறோம். 'இவன் என் ஆருயிர்த் தோழன். இவள் எனது உயிருக்குயிரான மனைவி' என்றெல்லாம் நாம் யாரைக் குறித்துச் சொல்லுகிறோமோ அந்த நபர்களெல்லாம் நமக்கு இடுக்கண் வந்துற்ற பொழுது, நம் கையில் காசில்லாத பொழுது, சொல்லாமல் கொள்ளாமல் நம்மைத் தனியே தவிக்க விட்டுச் சென்று விடுகின்றனர். இதைத்தான் அன்றே ஸ்ரீ சங்கர பகவத் பாதர், नश्यन्ति सकला रोगन् सत्यं सत्यं वदाम्यहम् ।। (எதுவரை கையில் காசும் பணமும் அதுவரை மனையில் சுற்றமும் உறவும்) என்று சொல்லிப்போனார். அன்றுள்ள நிலைமை தான் இன்றும்! அடிப்படை உண்மைகள் என்றும் மாறமாட்டா! உலகோரை நம்பி ஏமாறுவதற்குப் பதிலாக பகவானை நம்பினால் நாம் ஏமாறவே மாட்டோம். ஏனெனில் அவனே நமக்கு உற்ற துணைவன், ஆருயிர் நண்பன்.

நாம் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கக் கூப்பிட்டால் ஓடோடியும் வந்து நமக்கு உதவ அவன் யாண்டும் காத்திருக்கிறான். ஆனால் நாமோ திரௌபதியைப் போல, சபரியைப் போல, பிரஹ்லாதனைப் போல, துருவனைப் போலக் கூப்பிடத் தயாராக இல்லை. நமதுபக்தியெல்லாம் போலி பக்தி. பின் எப்படி இறைவன் நம்மிடம் வருவான்?

**தபாம்யஹமஹம் வர்ஷம்**
**நிக்ருஹ்ணாம்யுத்ஸ்ருஜாமி ச|**
**அம்ருதம் சைவ ம்ருத்யுஶ்ச**
**ஸதஸச்சாஹமர்ஜுன ||19||**

'அர்ஜுனா! நான் வெப்பம் தருகிறேன். மழையைப் பெய்விக்கவும் தடுக்கவும் செய்கிறேன், சாகாமையும், சாவும், ஸத்தும் அஸத்தும் நானே'

சூரியன் பகவத் சொரூபம். சூரியனின்றேல் நமக்கு வெப்பம் கிட்டாது. சூரியன் தான் மழைக்குக் காரணம். சூரிய ஒளியால் தான் கடல் நீர் ஆவியாகி மேலே சென்று மேகமாகி அது மழையாகப் பொழிகிறது. காலையில் கிழக்கே சூரியன் உதயமாகும் அழகை எப்படித் தான் வர்ணிப்பது! எத்தனையோ யுகயுகாந்தரமாக இந்த சூரியோதய நிகழ்ச்சி தினமும் நடைபெற்றுக் கொண்டு வருகிறது எனினும், அன்றாடம் நித்தம் நித்தம் உதிக்கும் அதில் தான் எத்தனை புதுமை, எவ்வளவு பொலிவு! சோம்பிக் கிடந்த உலகம் கிழக்கு வெளுத்ததும் மளமளவென்று எழுந்திருந்து எவ்வளவுசுறுசுறுப்படைகிறது. தூங்கிக் கொண்டிருந்த புள்ளினங்கள் அதிகாலையில் வானத்தில் கோலம் போட்டாற்போல் வரிசை வரிசையாக படபடவென்று இறக்கைகளை அடித்துக் கொண்டு பறந்து செல்லும் காட்சி, அப்பப்பா, மனதிற்கு எவ்வளவு மகிழ்ச்சியை அளிக்கிறது! 'நாமும் ஒரு பறவையாகி அந்தக் கூட்டத்துடன் கலந்துகொள்ள மாட்டோமா' என்று ஏங்குகிறதே நம்மனம். 'போதும் இந்தப் புல்லிய புவி வாழ்வு. அதோ அந்தப் பறவை போல நாம் பறந்து செல்லுவோம். இதோ இந்தக் குருவி போல நாம் பாடிச் செல்லுவோம்' என்று நமது மனம் அந்தப் பறவைக் கூட்டத்தைக் கண்டதும் மகிழ்ச்சியால் துள்ளுகிறது. அவை அனைத்தும் பகவத் சொரூபம்.

மழை பொழிவதும், பொழியாது பொய்ப்பதும் எல்லாம் இறைவன் செயல் தான். மழை வேண்டும் என்னும் போது மழைபொய்வதில்லை. மழை வேண்டாம் என்னும் போது அது சோவென்று கொட்டுகிறது. சில வருடங்களுக்கு முன்பு சென்னை மாநிலம் வறட்சியால் தவித்த சமயம். மழை பெய்யாதா என்று அனைவரும் ஏங்கித் தவித்த வேளை. அயல் நாடு

களிலிருந்தெல்லாம் நிபுணர்களை வரவழைத்து 'ஸில்வர் அயொடைடு' என்னும் ரசாயனப்பொருளை மேகங்களின் மீது விமானத்தின் மூலம் தெளித்து செயற்கை மழைக்கான ஏற்பாடுகளுக்காக லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவு செய்தும் மழை பெய்யாது பொய்த்தது. ஆலயங்கள், சர்ச்சுகள் மசூதிகள் என்று பல்வேறு தேவாலயங்களிலும் பல்வேறு சமயத்தவரும் 'மழையே வருக, வாழ்வைத் தருக' என்று பிரார்த்தித்தும் பயனில்லை. பிறகு சில மாதங்கள் கழித்து வந்தது மழை. எப்படி வந்தது? பாட்டம் பாட்டமாக வந்தது. விடாது பெய்தது. அடை மழையாகப் பெய்தது. சோவென்று வானமே பொத்துக் கொண்டாற் போலக் கொட்டித் தள்ளியது. குறிப்பாக, 'மழை வேண்டும் மழை வேண்டும்' என்று ஏங்கித் தவித்த சென்னை மாநகர மக்கள், 'மழை போதும், மழை போதும்' என்று வேண்டிக் கொள்ளும் அளவுக்குப் பயங்கரமாகப் பெய்தது. கடலை ஒட்டிய பகுதிகள், தாழ்வான சேரிப் பகுதிகள் எல்லாம் வெள்ளக் காடாயின. வறட்சி நிவாரணம் வெள்ள நிவாரணமாக மாறியது. இதெல்லாம் காட்டுவது எதை? 'மழையைப் பெய்விக்கவும் தடுக்கவும் செய்வது எல்லாம் பகவான் தான்' என்பதைத் தான்.

மரணமும் பகவான்தான். அமிருதமாகிய சாகாமையும் பகவான் தான். தோன்றிய எதுவும் மரிக்க விரும்புவதில்லை. அது உயிர்களின் சுபாவமாகும். ஆனால் தோற்றம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு மறைவும் முக்கியம் தான். பிறப்பு எவ்வளவு முக்கியமோ அவ்வளவு இறப்பும் முக்கியமே. உணவு உட்கொள்வது எவ்வளவு இன்றியமையாததோ அவ்வளவு இன்றியமையாதது மலம் வெளியாவதுமாகும். பாலத்தின் ஒரு புறம் தண்ணீர் வந்து கொண்டிருக்க வேண்டும். மறுபுறம் அது போய்க்கொண்டேயிருக்க வேண்டும். இன்றேல் பாலத்தையே அது உடைத்துக் கொண்டு போய் விடும். அது போல வாழ்வில் ஜனனம் எவ்வளவு முக்கியமோ அது போல மரணமும் முக்கியமே. அழிவும் அவனே. அழியாமையும் அவனே.

இதனால் தான் '**मृत्यो र्मा अमृतं गमय**' என்பது பிரார்த்தனையாகிறது. இதையே நாம் மற்றொரு கோணத்திலும் காணலாம். மனிதர்களுக்குச் சாவு உண்டு. தேவர்களுக்கு அது கிடையாது. அவரவர்கள் கர்மபலனுக்கு ஏற்ப தேவர்கள் சாகாமையையும், மனிதர்கள் சாவையும் பெறுகின்றனர். சாவு, சாகாமை இரண்டுமே வெவ்வேறு வேளைகளில் விருப்பையும் வெறுப்பையும் தருகின்றன. நோயினால் வாடித் துடிக்கும் நோயாளிக்கு வாழ்வு கசக்கிறது. சாவை அவன் வேண்டுகிறான். ஆனால் சாதாரண ஆரோக்கிய நிலையில் உள்ள மனிதர்களுக்கு சாவு கசக்கிறது. வாழ்வு இனிக்கிறது. எனவே ஜீவனை ஞானத்திற்குப் பக்குவப் படுத்துவதற்கு தேவர்களின் சாகாமையும் நரர்களின் சாவும் மாறிமாறிப் பயன்படுகின்றன.

'ஸத்தும் அஸத்தும் நானே' என்கிறார் பகவான். உயிர்களிடத்து ஏற்படும் தோற்றம் 'ஸத்' எனவும், தோன்றாநிலை 'அஸத்' எனவும் இங்கே இயம்பப்படுகிறது. தோன்றா நிலை 'அஸத்' என்பதால், அது சூன்யமல்ல என்கிறது.

ரிக் வேதத்தின் நாரதீய சூக்தத்தில், '**नासदासीन्नो सदासीत्तदानी**' (**ऋग्वेद** - 10 - 129) என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'அஸத்தோ அல்லது ஸத்தோ அப்பொழுது இருந்ததில்லை' என்பது இதன் பொருள். தைத்தீரிய உபநிடதத்தில் ஒரு பகுதி வருகிறது.

'ஆரம்பத்தில் அஸத் இருந்தது. அதிலிருந்து ஸத் தோன்றியது'

'**असद्वा इदमग्र आसीत् ।**
**ततो वै सदजायत ।** (**तैत्तिरी** - 2 - 8)

சாந்தோக்ய உபநிடதத்தில்,

'**सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम् ।**'

''ஆரம்பத்தில் எல்லாம் இரண்டற்ற ஒரே 'ஸத்' ஆகத்தான் இருந்தது' என்ற பகுதியைக் காண்கிறோம்.

வெவ்வேறாக முரண்பட்டுத் தோன்றும் இந்தப் பகுதிகளிலிருந்து நமக்கு என்ன தெரிய வருகிறது? ஸத் (தோன்றிய நிலை) அஸத் (தோன்றாநிலை) எல்லாம் ஒரே பிரம்மத்தைத் தான் குறிக்கின்றன என்பதுதான் அடிப்படைக் கருத்தாகும்.

## அறிவிப்பு

சந்தாதாரர்கள் தங்களுடைய சந்தாத் தொகையினை ஒவ்வொரு மாதத்தின் 15ஆம் தேதிக்குள் மார்க்கெடிங் ஆபீஸர், பப்ளிகேஷன் செக்‌ஷன், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி என்ற முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். அப்போதுதான அவர்களுக்கு அடுத்த மாதத்திலிருந்து 'ஸப்தகிரி' பத்திரிகையை தொடர்ந்து அனுப்ப ஏதுவாக இருக்கும். இருப்பில் பிரதிகள் இருப்பின் அம்மாததிலிருந்து (பணம் அனுப்பும் மாதத்திலிருந்து) ஸப்தகிரி பத்திரிகைகள் அனுப்பி வைக்கப்படும். எம். ஓ. கூப்பனில் புதிய சந்தாதாரர்கள் எந்த மாதத்திலிருந்து பத்திரிகை வேண்டும் என்பதைத் தெளிவாக எழுதுதல் வேண்டும். தொடர்ந்து தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும் சந்தாதாரர்கள் மறக்காமல் எம். ஓ. கூப்பனில் தங்கள் சந்தா எண்களை குறித்தல் வேண்டும். ஸப்தகிரி மற்றும் தேவஸ்தான வெளியீடுகளுக்கான தொகையினை 'மார்க்கெடிங் ஆபீஸர், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி' என்ற முகவரிக்கு அனுப்புதல் அவசியம்.

கீதை பிறந்த காலத்தில் காமிய கர்மங்களைக் கொண்ட யாக யக்ஞாதிகள் நிரம்பப் பண்ணப்பட்டு வந்தன. அத்தகைய காம்ய கருமத்தின் பலன் என்ன என்ற கேள்விக்குப் பகவான் விடை தருகிறார்.

த்ரை வித்யா மாம ஸோமபா꞉ பூத பாபா
யக்ஞைரிஷ்ட்வா ஸ்வர்கதிம்
ப்ரார்த்தயந்தே|
தே புண்யமாஸாத்ய ஸுரேந்த்ரலோகம்
மஸ்நந்தி திவ்யாந் திவி தேவ
போகான் ||20||

"ரிக், யஜுர், ஸாமமாகிய மூன்று வேதங்களை யறிந்தவர்கள் யாகங்களால் என்னைப் பூஜித்து ஸோமபானம் செய்து பாபத்தினின்று விடுபட்டவர்களாகி வானுலகம் செல்ல விரும்புகின்றனர். அவர்கள் புண்ணியமான தேவேந்திர லோகத்தை அடைந்து சொர்க்கத்தில் திவ்யமான தேவ போகங்களை அனுபவிக்கின்றனர்."

முதலில் தோன்றியவை மேற்சொன்ன மூன்று வேதங்களே. நான்காவது வேதமாகிய அதர்வண வேதம் மிகவும் பிற்காலத்தியதாகையால் அது இதில் சேர்க்கப்படவில்லை. வேதங்களில் சொல்லப்பட்ட கர்ம காண்டத்தைப் பின்பற்றுபவர்கள் அடையும் பயன்களில் மிகப் பெரியது சொர்க்கத்தை அடைதலேயாகும். சொர்க்கம் என்பது துயரம், துன்பம் அற்ற நிலை. இந்திர பதவி தான் அவற்றில் தலையாயது ஆகும். நூறு யாகங்கள் செய்தால் அவனுக்கு இந்திர பதவி கிட்டுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஏற்கனவே சொல்லப்பட்டிருப்பது போன்று கர்மகாண்டம், ஞானகாண்டம் இரண்டும் சேர்ந்தவைதான் வேதங்கள். தாற்காலிக பதவியான சொர்க்கத்திற்கு வழி காட்டுவது கர்ம காண்டம். நிரந்தர பதவியான பகவானின் பேரின்ப நிலைக்கு வழி காட்டுவது ஞான காண்டம். ஞான காண்டத்தை விடுத்துக் கர்ம காண்டத்தில் கருத்தைச் செலுத்துபவர்கள் கற்பக விருக்ஷத்தின் அடியில் அமர்ந்து கொண்டு, தனக்கு எதிரே ஒரு துணியை விரித்து, 'ஐயா! பிச்சை போடுங்கள்!' என்று ஒருவன் கேட்பதற்கு நிகராகும்.

இறைவனை அடைவது தான் இறுதியான பேரின்பநிலை. அதை விடுத்து யாக யக்ஞங்கள் மூலம் சொர்க்கத்தை வேண்டுதல் மிகக் கீழான நிலையாகும். வாழைப் பழத்தில் இரண்டு பகுதிகள் உண்டு. ஒன்று உள்ளேயுள்ள பழப்பகுதி. மற்றது வெளியேயுள்ள தோல்ப் பகுதி. தோலை எறிந்து பழத்தைச் சாப்பிடுபவரே புத்திமான்கள். அதுபோல கர்ம காண்டத்தில் சிக்குறாது ஞானத்திற்காக முயல்பவரே அறிவுடையவர்கள்.

சொர்க்கத்திற்குப் போன பின்னர் அங்கே அவர்களது நிலை என்ன ஆகிறது என்ற கேள்வி உடனே எழுகிறது. அது தான் மேலான பதவியா, அல்லது அதற்கும் மேலான பதவி ஒன்று உண்டா, சொர்க்கத்தில் எத்தனை காலம் ஒருவன் இருக்கமுடியும், சொர்க்கத்தில் சில காலம் இருந்த பின்னர் அவனது நிலை என்ன ஆகிறது என்ற கேள்வியெல்லாம் பிறக்கிறது. இதற்கு அடுத்த சுலோகத்தில் பகவான் அழகாக விடை தருகிறார். (தொடரும்)

# ஸப்தகிரி ஸப்தகவி

திரு. எம். வி. சீநிவாசன், முசரபாக்கம்.

அஞ்சனவெற்பன் அணிதிரு வேங்கடவன்
கஞ்சக் கழலிணைகள் காப்பு
சேடாத் திரியான் திருவேங்கட முடையான்
பாடார் பதமெனக்குப் பற்று
கருடாத் திரியான் கவின் வேங்கடவன்
இருடீகே சன்துணையே
விருடா சலத்தானே! வேங்கட வெற்பா!
தெருடா மருள்ஒழித் தே
விருடப வெற்பப்பன் வேங்கட நின்றான்
கருடக் கொடியான்தாள் காப்பு
வைகுந்த மாமலை யான்வண் திருவேங்கடத்தே
வைகுவான் தாட்கள் சார் வாம்
நாராயணாத் திரிநம் பெருமான் வேங்கடவன்
ஆராவமுதன் அரண்.

# பகவத்பாதரின் பரம்பொருள் விளக்கம்

திரு. ஆர். வெங்கடரத்தினம்,
நெய்வேலி-1.



வரையறை, விளக்கம் யாவற்றிற்கும் அப்பாற்பட்டவர், பரம்பொருள் எனப் பேசப்படுபவர். எனவே எது சொல்ல முற்படினும் அது அல்ல என்ற எதிர்ப்பும் கூடவே தலையெடுக்கும். எது இல்லை எனக் கூறினும், அதுவாகவும் இருக்கக் கூடியவர் அவர். ஆக, எப்படி விளக்க முற்பட்டாலும், பரம்பொருளைத் தெளிவு ஆக்க முடியாது. இந்தக் குணம் பரம்பொருளின் அடிப்படைத் தன்மைகளுள் தலை சிறந்தது என்று கூறி, நாம் நம் இயலாமையை வெளிக்காட்டாது சமாளிக்கலாம்.

ஆதி சங்கரர் ஓர் இடத்தில் கூறுவார். பரம்பொருளினிடத்தில் ஈடுபாடே இல்லையே? சிறுவனுக உள்ள போது வெறும் விளையாட்டில் பொழுது போய் விடுகிறது. இளைஞன் ஆன பின்னர், வயது வந்த பெண்ணை வளைய வளைய வலம் வருகிறுன். கிழவனுக்கோ கவலைமேல் கவலை நிறைய இருக்கிறது. பரம்பொருளினிடம் ஒருவனுக்குமே நாட்டம் இல்லையே!

பாலஸ்தாவத் க்ரீடாஸக்த:
தருணஸ்தாவத் தருணீஸக்த: |
வ்ருத்தஸ் தாவச்சிந்தா ஸக்த:
பரே ப்ரஹ்மணி கோऽபி ந ஸக்த: ||

இது பஜகோவிந்த சுலோகம்-7 ஆகும். இறை நாட்டம் ஏதுமே இன்றி, நாளை ஓட்டி விடுகிருனே என்ற தவிப்பு ஆசாரியரின் இந்த நாலடிகளில் குரல் கொடுக்கிறது. வயது வரு முன்னே, வயது வந்த பின்னர், முதுமையே வந்தான பின்பும்—எல்லாப் பருவத்திலும் ஒரே கதை தான்! பரம்பொருளினிடம் எவனுக்குமே ஈடுபாடு இல்லையே!

எப்படி இருக்கும்? எது அழிவது—எது நிலையானது என்ற பாகுபாடு இல்லாத ஜன்மங்கள்! நித்தியப் பொருளை அடையாளம் கண்டு கொள்கிற அறிவு இருந்துவிட்டால் தான், எவ்வளவோ நன்ருய் இருக்குமே! இந்த உணர்வு தான்—நிலைப்பது, அழிவது என்ற தராதரம் காணும் அறிவு தான்-விவேகம் எனப்படுவது என்று சங்கரர் கூறுகிருர். விவேகம் என்ற கருத்திற்கு அவர் வரையறை தருகிற சுலோகம் வருமாறு:

ப்ரஹ்மைவ நித்யமன்யத்து
ஹ்யநித்ய மிதி வேதனம் |
ஸோ'யம் நித்யாநித்ய வஸ்து
விவேக இதி கத்யதே ||

இது ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸார ஸங்க்ரஹம் என்ற நூலில் 16-வது சுலோகம் ஆகும். நித்தியப் பரம்பொருளை நீத்து, நில்லாப் பொருள்களில் மனத்தைச் செலுத்துபவன் விவேகம் வரப் பெருதவன் ஆவான். இதையே மயிலை முனிவர், மெய்ப் பொருள் காண்பது அறிவு என்பார். எனவே, அறிவாளி சில்லறை விஷயங்களில் சிந்தையைச் சிதற விடாது, பரம்பொருளில் ஈடுபாடு கொண்டிருப்பான்!

பரம்பொருள் எத்தகையது?

அதை அறிந்த பின், மேலும் அறிதற்கு ஏதும் இல்லை. பரம்பொருளைக் கண்டு கொண்டு விடின், மேலே காண்பதற்கு ஒன்றும் இராது. இவ்வாருகப் பிரம்மத்திற்கு விளக்கம் தருவது ஆத்மபோதம் நூலின் 55-வது சுலோகம் ஆகும்.

யத் த்ருஷ்ட்வா நாபரம் த்ருஸ்யம்
யத் பூத்வா ந புனர்பவ: |
யஜ் ஞாத்வா நாபரம் ஞேயம்
தத் ப்ரஹ்மேத்யவ தாரயேத் ||

எதைப் பார்த்தான பின், வேறு ஏதும் பார்க்க இராதோ, எதுவாக ஆகிவிட்டால், மீண்டும் ஆவது என்பது இல்லையோ, எதை அறிந்துவிடின்




# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

## தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

### ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் | ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| அர்ச்சனை | டிக்கெட் ஒன்று | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனை | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அம்மையார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மையார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனை | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| நைவேத்தியங்கள் | | ரூ. |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

அறிவதற்கு ஏதும் இல்லையோ, அதுவே பரம்பொருள் என உணர்க!

இங்கு, முதல் அடியும் மூன்றும் அடியும் சொல்லாத ஒரு பேருண்மையை இரண்டாம் அடி உணர்த்தும். எதுவாக நாம் ஆகி விடின், திரும்பத் திரும்ப நாம் எதுவாகவும் ஆகிற பேச்சே எழாதோ, அதுவே பிரம்மம்! ஆம், இறைவன் அடிச் சேர்ந்தார் பிறவிப் பெருங்கடல் நீந்திக் கடந்தவர்கள் ஆவர்! திரும்பப் பிறந்து உழல்கிற கதை தொடர்வதில்லை. எனவே, இறுதி நிலை இறைத் தன்மை ஆகும்; பிறப்பு—இறப்பினுக்கு அப்பாற்பட்ட அமர நிலை அது!

யல்லாபாந் நாபரோ லாபோ
யத்ஸுகாந்நாபரம் ஸுகம் |
யஜ் ஞானந்நாபரம் ஞானம்
தத் ப்ரஹ்மேத்யவ தாரயேத் ||

இது 54-வது சுலோகம், அதே நூலில்; பழைய முறையிலேயே இறை விளக்கம் தருவது! இறைப் பேற்றை விட உயரிய பேறு வேறு இல்லை. இறையின்பம் கிட்டிவிடின், வேறு அடைதற்குரிய இன்பம் இல்லை. இறைவனைக் காணும் அறிவு இருப்பின், வேறு சிற்றறிவு எதற்கு? இவ்வாறாகக் கிடைத்தற்கரிய இன்பமாகவும், பேறாகவும், அறிவாகவும் திகழ்பவர் இறைவன்!

மிக உயரிய இன்பமாகவும், அறிவாகவும்—ஏன், அனைத்துமாகவும் விளங்கும் பரம்பொருள் வெகு நுண்ணியது ஆகும். ஊனக் கண்ணுக்கு அது தென்படுவதில்லை. பரம்பொருளைப் பற்றிய தத்துவம் மிகச் சூட்சுமமாக உள்ளது. எவரும் மேலெழுந்தவாறான நோக்கில் கண்டு கொள்ள இயலாது.

அதீவ ஸூக்ஷ்மம் பரமாத்மதத்வம்
ந ஸ்தூல த்ருஷ்ட்யா ப்ரதி பத்து மர்ஹதி|
ஸமாதிநாத்யந்த ஸுஸூக்ஷ்ம வ்ருத்யா
ஞாதவ்ய மார்யைரதி ஸுத்த புத்திபி: ||

இறைமையின் பெருமை பேசும் ஆதி சங்கரர், மிக மிக உயரிய, மகோன்னதப் பரம்பொருள் ஆகிய பிரம்மத்தை ஒட்டி, மிக-மிக என்ற குறிப்பினை உணர்த்த, 'ஆதி' என்ற சொல்லை அடுத்தடுத்து மும்முறை கையாள்வார். மிக நுண்ணியது பரம்பொருள் எனும் தத்துவம். அதை வெறும் புறக்கண்ணால் கண்டு கொள்ளல் நடவாத பேச்சு. மிகத் தூய அறிவு கொண்ட சான்றோர், சமாதி நிலையில் நின்று சூட்சுமமான போக்கில் அதை அறிய வல்லார்கள்! பொறிகளையும் புலன்களையும் அடக்கிய பெரியோர் அக நோக்கில் ஆண்டவன் எனும் பேருண்மையை அறிய வல்லவர் ஆவர். இது விவேக சூடாமணி, சுலோகம் 36.

மேலே கூறப்பட்ட சமாதி நிலை பற்றிய பேச்சு, இறைவனைக் காணுதற்கான தொரு மார்க்கமாகப் பேசப்படும். தனியிடத்து அமர்ந்து, பற்றுக்களைக் களைந்து, புலன்களை வென்று, சிந்தனையை ஒரு முகமாக்கி, இறைவனை மனத்தில் இருத்தவேண்டும் என்பது ஆத்ம போதத்து 38-ம் சுலோகம்.

**விவிக்த தேஸ ஆஸீநோ**
**விராகோ விஜிதேந்த்ரிய:**
**பாவயேதேக மாத்மாநம்**
**தமநந்த ம நன்யதி: ||**

முன்னர் கூறிய சமாதி நிலைக்கு விளக்கம் இங்கு உள்ளது. ஆள் இல்லாத இடத்தில் அமர்ந்து, பற்றற்றுப் புலன்களை வென்று, வேறு சிந்தனை ஏதும் இல்லாமல், அந்த ஒரே மூலப் பரம்பொருளைப் பற்றியே எண்ணுதல் வேண்டும்.

அந்த நிலையில் அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் என்ற வேறுபாடுகள் காணப்பட மாட்டா. அறிவும் ஆனந்தமும் ஒன்றான வடிவம் ஆகிய பரம்பொருள் தானே சுடர் விட்டு ஒளிர்கிறது.

**ஞாத்ரு ஞான ஞேய பேத;**
**பரே நாத்மனி வித்யதே |**
**சிதானந்தைக ரூபத்வா**
**த்தீப்யதே ஸ்வயமேவ ஹி ||**

பரம்பொருளினிடம் அறிவு-அறிபவன்-அறியப்படுவது என்ற மூன்றும் ஒன்றாகிப்போம். ஏனெனில் பரப்பிரம்மம் சித்(அறிவு), ஆனந்தம் (இன்பம்) என்ற இரண்டும் ஒன்றாகி உள்ள நிலையில் இருப்பது. அது தானே சுயம்பிரகாசமாக ஒளிவிட்டு, அறியாமையையும் துன்பத்தையும் அண்டவிடாமற் செய்கிறது. இது ஆத்ம போதத்தில் 41-ம் சுலோகம் ஆகும்.

பரம்பொருளை உணர்ந்தவன்தானே பரமாத்ம சொரூபத்தில் விளங்குவான். இறைத் தன்மையை எய்தியவன் அவன். எனவே அறிவும் ஆனந்தமும் நிறைந்த நிலையில் அவன் திகழ்வான்.

**ரூபவர்ணுதிகம் ஸர்வம்**
**விஹாய பரமார்த்தவித் |**
**பரிபூர்ண சிதானந்த**
**ஸ்வரூபேணுவதிஷ்டதே ||**

இறைமையை எய்தியவனிடம் எள்ளளவும் சின்னஞ் சிறு வேறுபாடுகள் தலையெடுப்பதில்லை. வடிவம்-வண்ணம் போன்ற எல்லாவற்றையும் விடுத்து, நீக்கமற நிறைந்த சிதானந்த சொரூபமாக விளங்குகிறான். மெய்ஞ்ஞானி என்பது ஆத்ம போதத்தின் 40-ம் சுலோகம்.

உயிர்கள் யாவுமே பரம்பொருளின் 'அம்சங்கள்!'. எல்லா உயிர்களுக்கும் தோற்றுவாய் ஈசனே. இறுதியில் அவ்வளவும் ஒடுங்கப் போவதும் அங்குதான்! இந்த உணர்வு வேண்டும் பிரம்ம ஞானி ஆவதற்கு. அபரோக்ஷானுபூதியில் வரும் 49-வது சுலோகம் இவ்வுண்மையை இரண்டே அடிகளில் தெளிவாக்கும்.

**ப்ரஹ்மண: ஸர்வபூதானி ஜாயந்தே**
**பரமாத்ம ந: |**
**தஸ்மாதேதானி ப்ரஹ்மைவ பவன்தீத்**
**யவதாரயேத் ||**

இறைவனிடமிருந்து எழுந்தவைதான் ஜீவராசிகள் அனைத்தும். எனவே இவையாவும் இறைவனிடம் உட்கலந்து பிரம்மமாகவே ஆகிவிடுகின்றன.

உலகினுக்கு உயிரும் ஒளியும் ஊட்டுவது இறைவனே. ஈசனின் அம்சமே சூரியன், சந்திரன் முதலானோர். பிரம்மம் இல்லையேல், சூரியனுக்கு ஒளியில்லை. ஆனால் சூரியனின் ஒளியினால் பிரகாசிப்பவர் அல்ல ஈசுவரன். அவரால்தான் இவ்வுலகே கண்ணுக்குத் தெரிகிறது. ஆத்மபோதம், சுலோகம் 61:

**யத்பாஸா பாஸ்யதே'ர்க்காதி**
**பாஸ்ஸ்யர்யத்து ந பாஸ்யதே |**
**யேந ஸர்வமிதம் பாதி**
**தத் ப்ரஹ்மேத் யவ தாரயேத் ||**

உலகினுக்கு ஒளியூட்டிக் கொண்டு, தாம்சுயச் சுடராக விளங்குபவர் பரம்பொருள். அவரிடத்திலிருந்து தான் சூரியனுக்கே ஒளியும் மதிப்பும் வந்தன!

ஆயினும், அந்தப் பரப்பிரம்மத்தை இன்ன அளவு, இன்ன வடிவம், இன்ன நிறம் என எவரும் கூறுதற்கில்லை. அணுவிற்கு அணுவாய், அப்பாலுக்கு அப்பாலாய்— எல்லாமாகவும் இருப்பவர் அவர்.

**அனண்வஸ்தூல மஹ்ரஸ்வமதீர்கமஜ**
**மவ்யயம் |**
**அரூபகுணவர்ணுக்யம் தத் ப்ரஹ்மேத்**
**யவதாரயேத் ||**

அணுவல்ல; மிகப் பெரிதுமல்ல. நீண்டதும் அல்ல, குட்டையுமல்ல. பிறப்பு அற்றது; மாறுதல்களும் இல்லாதது. வடிவம், இயல்பு, நிறம், பெயர் ஒன்றும் இல்லாதது எதுவோ, அதுவே பிரம்மம் எனத்தேர்க. (ஆத்ம போதம் 60)

இவ்வாறு புற வடிவமும் வண்ணமும் இல்லாமையினால்தான் போலும், கடவுள்கண்ணுக்குத்தென்படுவதில்லை. மற்றைய பொருட்கள் யாவும் கண்ணுக்குத் தெரிகின்றனவே எனில், ஆதி சங்கரர் ப்ரபோத ஸுதாகரத்தில் காரணம் சொல்வார். சுலோகம் 197.

**இதரே த்ருஸ்யபதார்தா லக்ஷ்யன்**
**தே'னேன் சக்ஷுஷா ஸர்வே |**
**பகவானனயா த்ருஷ்ட்யா ந லக்ஷ்யதே**
**ஞானத்ருக்கம்ய: ||**

இதரக் காட்சிப் பொருள்கள் யாவும் இந்தக் கண்ணுக்குத் தென்படுகின்றன. பகவான் இந்தப் பார்வை

## திருவேங்கடவர் பொன்னூசல்

செஞ்சொற்கவி. T. S. ராஜகோபாலன்

### பரத்துவம்—பிராட்டியின் மண நோக்கு

பேரின்ப வெள்ளஞ்சேர் விண்ணி லெங்கும்
பிறங்குபுகர் தன்னிடையே பதுமை பெய்யும்
ஓரின்ப மணநோக்கா லொப்பே யின்றி
ஓங்குபெருந் தனிச்செல்வர்! இறைவீர்! இன்று
காரின்பங் கண்டுபுணர் மின்னி னேடுங்
காவணையும் வேங்கடத்தி னுச்சி யின்பால்
சீரின்ப வளம்பெருக வந்து நின்றீர்!
தெள்ளமுதே! திருமார்வர்! ஆடி ரூசல்.

### பரத்துவம்—இறைவனது செல்வம்

பிறவாது முன்னேரும் பிறவி நீத்த
பெரியோரும் பெரும்பரிவில் தொண்டிலூன்ற
இறையேனும் பிரியாது சேடன்பாலே
இன்பமிக வீற்றிருக்கு மேந்தால்! இன்று
குறையாத புனலருவி முத்தொ ளிர்த்துக்
குலவுதிரு வேங்கடத்தி னுச்சி யின்பால்
மறையோது முதலாகி வந்து நின்றீர்!
மறுவொளிருந் திருமார்வர்! ஆடி ரூசல்.

### வியூகம்—யோக நித்திரை

மின்பற்று நுண்மருங்குல் விமலை தானும்
விரும்பிமிக அணைத்தாலும் விமுகராகித்
துன்புற்றூர் துனிகேட்பான் பாலின் மேலோர்
பாந்தள்மேல் துயில்கொள்வீர்! கொண்டால்! இன்று
வன்பற்று வேடுவர்தாம் பிரியா தென்றும்
வாழுஞ்சீர் வேங்கடத்தி னுச்சியின்பால்
என்பற்று யெனக்குயிராய் வந்து நின்றீர்!
எம்பெருமான்! திருமார்வர்! ஆடி ரூசல்.

### வியூகம்—மூர்த்திகள் மூவரானமை

ஒருமூன்றி னுருவாய வியூக மாகி
உயிர்தம்மைப் படைத்தளித்து மாய்க்க வாகும்
இருமூன்று மருங்குணங்கள் ஞான மின்ன
இலங்கவரும் முன்னுருவே! பொன்னே! முத்தே!
ஒருமூன்றும் மூன்றினெடு மொன்று மாய
உயர்கோட்டு வேங்கடத்தி னுச்சி யின்பால்
இருமூன்று சமயத்தார்க் கெட்டா தோங்கும்
விரிகதிரே! திருமார்வர்! ஆடி ரூசல்.

### அந்தர்யாமி—பெரியோர்களது உள்ளத்தில் உறைவது

பண்ணவர்தம் நெஞ்சாகும் பதுமந் தன்னுட்
பதுமையுடன் படிந்துபுற மெதுவு மெங்கும்
எண்ணகிலா தவர்க்கென்று மெல்லா மாகி
இன்பமுறு மச்சுதனே! பச்சைத் தேனே!
விண்ணவரும் புகலெனவே மேவுஞ் சீரின்
விண்படரும் வேங்கடத்தி னுச்சி யின்பால்
மண்ணவர்தம் வினைதீர வணங்க நின்றீர்!
வனமாலைத் திருமார்வர்! ஆடி ரூசல். (தொடரும்)

யில் அகப்படுவதில்லை: ஞானவழியே உட்புகுபவர் அவர்! (உத்தரோ—ஞானகம்ய: புராதன: என்பது விஷ்ணு ஸஹஸ்ர நாமம்)

ஆனால் உட்புகுந்துவிட்டார் எனில்?

அப்புறம், காணுகின்ற பொருள்கள் யாவுமே கடவுளாகத் தெரியும். பரம்பொருளைக் கண்டு கொள்ள வேண்டியது தான் தாமதம், பின்னர் உலகம் முழுதுமே இன்பப் பூங்காவாகத் தெரியும். எல்லா மரங்களுமே தேவ லோகத்துக் கற்பக விருட்சமாகத் தோன்றும். எல்லா நீர் நிலைகளுமே கங்கையின் புனித தீர்த்தம்தான். எது செய்தாலும், புண்ணிய கைங்கரியமாகத் தெரியும். பேசுகிற பேச்செல்லாம், வேத உபநிஷத வாக்காகத் தொனிக்கும். பூமண்டலம் முழுதுமே முக்தி தரும் காசி க்ஷேத்திரமாகி விடும். அப்போது எல்லாச் செயல்களும் பரம்பொருளைப் பற்றியவையாக இருக்கும். தன்யாஷ்டகத்தில் 10-வது சுலோகம் இது:

**ஸம்பூர்ணம் ஜகதேவ நந்தனவனம்**
**ஸர்வே'பி கல்பத்ருமா**
**காங்கம் வாரி ஸமஸ்தவாரி நிவஹா:**
**புண்யா: ஸமஸ்தா: க்ரியா |**
**வாச: ப்ராக்ருத ஸம்ஸ்க்ருதா: ஸ்ருதி ஸிரோ**

**வாராணஸீ மேதினீ**
**ஸர்வாவஸ்திதிரஸ்ய வஸ்துவிஷயா**
**த்ருஷ்டே பரப்ரஹ்மணி ||**

ஈற்றடியில் உள்ள 'த்ருஷ்டே பரப்ரஹ்மணி' (பரம்பொருளை மட்டும் கண்டு கொண்டால்) முக்கிய நிபந்தனையாகும். அது நிறைவேறி விடின், உலகமே பூஞ்சோலையாக இனிக்கும். கண்ணில் தெரிவன யாவும் களிப்பூட்டும்; கடவுள் அம்சத்தோடு நெஞ்சிற்கு இதமாக இருக்கும்.

இந்தப் பரம்பொருள் உணர்வோடு, பாரதி பாடிய பாட்டு ஒன்று உண்டு.

காக்கைச் சிறகினிலே நந்தலாலா—
நின்றன்
கரிய நிறம் தோன்றுதையே நந்தலாலா
பார்க்கு மரங்களெல்லாம் நந்தலாலா—
நின்றன்
பச்சை நிறம் தோன்றுதையே நந்தலாலா
கேட்கும் ஒலியிலெல்லாம் நந்தலாலா—
நின்றன்
கீதே மிசைக்குதடா நந்தலாலா!





### அழகிய மணவாளதாசர் :

வேங்கடத்து 'மாலை' ப் பாடும் பல நூல்களுள் 'திருவேங்கடமாலை' என்பதும் ஒன்றாகும். இதனைப் பழுத்த வைணவ பக்தராம் அழகிய மணவாள தாசர் என்கிற 'பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்' அவர்கள், அலர்மேல் மங்கை உறைமார்பன் (ஸ்ரீநிவாஸன்) பேரில் பக்திச் சுவை ததும்பப் பாடியுள்ளார். இவர் வைணவ சமயத்தின் பாலும், திருவேங்கடநாயகன் மீதும் அழுத்தமான மாறா அன்பு பூண்டவர்.

### இயற்றிய நூல்கள் :

இவர் பக்தி மீதூரப் பெற்று இறைவன் பேரில் பல நூல்களை இயற்றியுள்ளார். அவை, 1. திருவரங்கத் தந்தாதி, 2. திருவரங்கத்துமாலை, 3. திருவரங்கக் கலம்பகம், 4. ஸ்ரீரங்கநாயகரூசல், 5. திருவேங்கடமாலை, 6. திருவேங்கடத்தந்தாதி, 7. அழகரந்தாதி, 8. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி என்பனவாம்.

இவை எட்டும் 'அஷ்டப்பிரபந்தம்' எனவும், 'ஐயங்கார் பிரபந்தம்' என

# திருமலையும் திவ்வியகவியும்

திரு. சி. மெய்கண்டான்,
வடசென்னிமலை.

### முன்னுரை :

திருவேங்கடம்...திருமலை...திருப்பதி! என்ன அழகான, பக்தி உணர்வையூட்டும் திருப்பெயர்கள்......?

திருவேங்கடம்...இது திருமால் எழுந்தருளியிருக்கும் திவ்விய தேசங்கள் நூற்றெட்டனுள் (108) ஒன்றாகும் பெருமையுடையது. கோயில், திருமலை, பெருமாள் கோயில் என்று சிறப்பித்துக்கூறப்படுகின்ற மூன்றனுள் இடையதும், நடுநாயகம் ஆனதும் ஆகும் பெருமையுடையது. 'வேம்' என்றால் பாவம்; 'கடம்' என்றால் எரித்து அழித்தல், தன்னைத் தஞ்சம் என்று அடைந்தவர்களுடைய பாவங்கள் அனைத்தையும் எரித்து அழிப்பதனால் 'வேங்கடம்' என ஆன்றோரால் அழைக்கப்பெற்றது. இத்திருப்பதி பன்னிரு ஆழ்வார்களில் தொண்டரடிப் பொடியாழ்வாரும், மதுரகவியாழ்வாரும் தவிர்ந்த பத்து ஆழ்வார்களாலும் மெத்தப் புகழப் பெற்றதாம்.

வும் வழங்கும். இவை தவிர 'பரப்பிரஹ்ம விவேகம்' எனும் நூலையும் ஆக்கியுள்ளார்.

### திருமலை பற்றியன :

இவர் இயற்றிய நூல்களில் 'திருமலை' தொடர்புடையவையாக 'திருவேங்கடமாலை' யும், 'திருவரங்கத் தந்தாதி' யும் விளங்குகின்றன.

### திருவேங்கடமாலை:

இவற்றுள் 'திருவேங்கடமாலை' எனும் நூல் கவிதைவளம் சொட்டும்

நூல் ஆகும். வேங்கடவன் மேல் கொண்ட காதலைக் கவிதைப் பெருஞ் சாற்றோடு கலந்து தருகின்றார் ஆசிரியர். 'பாலாய வேலை நடுவில் துயிலும் வித்தகனை' த்தம் பாவால் புகழ்கின்றார். இந்நூல் நன் பாவாம் வெண்பாவால் ஆனது; நூறு மலர்களால் தொடுக்கப் பெற்றுத் திருவேங்கடமுடையானது திருவடிகளிலே சூட்டப் பெறுகின்ற திருமாலை போன்றது ஆகலின் இது திருவேங்கடமாலை எனப் பெயர் பெற்றது.

## அமைப்பு :

இத்திருவேங்கடமாலையின் அமைப்பு மிக அழகியது; ஒரு வெண்பா மலரின் முன்னிரண்டடிகள் திருவேங்கடத்தின் சிறப்பைப் பேசுகின்றன; பின்னிரண்டடிகள் அத்திருமலையில் எழுந்தருளியிருக்கும் தீராதவினை தீர்க்கும் நாராயணனும் திருவேங்கடவனைப் புகழ்கின்றன. இவ்வாறு திருமலையினையும், அங்கு நின்ற கோலத்துக் காட்சியளிக்கும் எம்பெருமானையும் வாயாரப் புகழ்கின்றார் திவ்வியகவி பிள்ளைப் பெருமாளையங்கார் அவர்கள்.

## திருமலையின் சிறப்பு :

அவன் நின்றிருக்கும் திருமலை வளம் மிக்கது; எல்லா நலன்களையும் கொடுக்கும் இறைவன் உறைவதால் எல்லா நலன்களையும் கொண்டது. இயற்கை அன்னையின் எழிலை அங்குக்காணலாம். 'கீசுகீசு' என்று ஓசை கொடுக்கும் பல்வேறு பறவைகளின் ஒலி, 'சலசல' வென்று ஓடும் அருவிகளின் அழகு ஒலி, போர்மாக்களின் ஒலிஆகியவை இடைவிடாது எங்கும் கேட்டுக் கொண்டேயிருக்கும். அது மட்டுமா?

பொன்னும், மணியும் பொலிந்து ஓங்கி, நிலமகளின் திருமுடிபோல் மின்னி ஒளிர்வது அத்திருமலை; ஒரு வகையில் நோக்கும்போது அம்மலை பிரமனைப் போன்றும், சிவபிரானைப் போன்றும், இந்திரனைப் போன்றும், ஆறுமுகன் போன்றும் விளங்குகின்றது.

அதன் உயர்ச்சியோ அளவிடற்கரியது; இவ்வுலகில் மாண்டு பிறக்குந் துயரை நீத்து 'வைகுண்டம்' சென்றடைந்தவரும், மீண்டும் இவ்வுலகில் பிறக்க விரும்பும் உயர்வுடையது வேங்கடமலை! எவ்விடத்திலுள்ளோரும் இறைஞ்சித் திசை நோக்கித் தொழும் சிறப்புடையது; 'பத்தருக்கு வந்த துக்கம் காப்பான்' வாழும் மலையது; பிறவி நோவினையும், உள்ள, உடல் நோய்களையும், நோய்செய்வினையினையும் தீர்த்தருளுவது!

## திருமாலின் சிறப்பு :

இத்தகு பெருமை மிகு திருமலையில் உறையும் இறைவனின் சிறப்போ அளவிடற்கரியது; அவ்வேங்கடவன் பரமபத நாட்டினன்; திருப்பாற்கடலான்; ஆணிப் பொன்னிறப் பீதாம்பரன்; தன் அருட்பார்வையை அடியார்மேல் வைக்கும் செங்கமலப் பார்வையான்; ஞானமுதல் ஆழ்வார்கள் தம் வெண்பாவை ஆதரிப்பவன்.

## திருவேங்கடமாலை கவிதைவளம் :

இத்தகு சிறப்புமிகு இறைவன் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமலையின் சிறப்பினைக் ,கவிதை நயம் படப் புதுமையாக பாடுகின்றார் ஆசிரியர். ஆம்! மேஷம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்கின்ற இராசிகளையும், மூலம், அவிட்டம் என்கின்ற வானத்தில் ஊர்ந்துவரும் நட்சத்திரங்களையும் தம் கற்பனையாற்றலால் இணைத்துச் சொற்சிலம்பம்ஆடுகின்றார்; அவற்றை இனிக்காண்போம்.

## மேஷம் :

கட்டுத் தறியை முறித்து எழுகின்ற மதக்களிறும் 'குவலயா பீடம்' என்ற யானையை வென்றவன் வேங்கடவன், கிருஷ்ணாவதாரத்தில்! வெண்ணெயை உண்ணுவதற்குத் தனது செம்பவளம் போன்ற திருவாய் மலரை 'ஆ' வென்று திறந்தவன் அந்த அருளாளன்; அவன் உறைகின்ற மலையோ மிக்க உயர்வுடையது; எந்த அளவு உயரமுடையது? பாடுகின்றார் திவ்வியகவி!

திருமலையானது செழித்து அடர்ந்த காடுகளையுடையது; வரிப்புலிகளும் உண்டு அந்தக்கானகத்தில்! அங்கிருந்த ஒரு புலிக்கோ ஒரு நாள் மிகுந்த பசி. எங்கலைந்தும் பசி தீர ஒரு வாய்ப்பும் இல்லை. எனவே, வானத்தைப் பார்த்தது! அப்போழுது ஆட்டின் வடிவமான மேஷராசியானது வானத்திலே திருமலையின் மேலாகச் சென்றது. அதனைக் கண்டது அந்தக்கடுவாய்! நமக்கு உணவாவதற்கு ஓர் ஆடு (மேஷம்) கிடைத்ததே என்று தன்னுடைய வாலை ஆட்டி அதனைப் பார்த்து உறுமுகின்றதாம். இவ்வாறு திருவேங்கடமலையிலுள்ள புலி, வானத்து மேஷராசியைப் பார்த்து உறுக்கும் அளவிற்கு அம்மலை உயர்ச்சி உடையதாம் எனக் கவிதை நயம்பட,

> '' வாடப் பசித்த வரியுழுவை வாலாட்டி
> மேடத்தைப் பார்த்துறுக்கும்
> வேங்கடமே ''

எனப்பாடுகிறார்.

(உழுவை—புலி; மேடம்—மேஷராசி)

## கடகம் :

பிரமன், சிவன் ஆகிய இருவரையும் தனது அங்கத்தில் உடைய திருமால் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடத்தில் பிறிதொரு காட்சி!

சோலைகளில் உள்ள உயர்ந்த வானளாவிய மரங்களில் குரங்குகள் வாழ்கின்றன; மரத்திற்கு மரம் தாவி விளையாடி மகிழ்கின்றன. இவ்வாறு தாவி மகிழ்ந்து விளையாடும் வானரங்கள் திடீரென்று அஞ்சி ஓடி அலமருகின்றனவாம். ஏன்? வானத்தில் ஒரு நண்டைக் கண்டன; ஆம்! நண்டு வடிவமான கடகராசியானது வானத்தில் ஊர்ந்து வர அதனைக் கண்டு அச்சமுற்று ஓடுகின்றனவாம். நண்டுகளைக் கண்டு அஞ்சும் குரங்கின் இயல்பினைக் கொண்டு, திருவேங்கடமலையின் உயர்ச்சியினை மிக அழகாகத்,

" தாவிவரும் வானரங்கள் தண்
குவட்டில் கற்கடகம்
மேவிவரக் கண்டோடும் வேங்கடமே"

என்று பாடுகின்றார்.

(தண்குவடு—குளிர்ந்த சிகரம்;
கற்கடகம்—கடகராசி)

## சிம்மம்:

எவருடைய மனத்திற்கும் எட்டாத தன்மையுடைய எம்பெருமான் உறையும் மலையில் மற்றுமொரு காட்சி. அம் மலையில் காதலோடு வாழும் களிறும் பிடியும்! என்ன காரணத்தாலோ, காதற் பிடியானது களிற்றுடன் ஊடுகின்றது; ஊடல் மிகவே, தனித்து ஓதுங்குகின்றதாம் அந்தப்பெண்யானை. ஆண் யானைக்கு அதன் ஊடலை எவ்வாறு மாற்றுவது என்ற ஒரு கவலை. அந்த நிலையில் வானத்திலே சிங்க வடிவமான சிம்மராசி ஊர்ந்து வருகின்றது; இதனைக் கண்டதும், உண்மையான சிங்கமென்று மருண்டு, ஓடிய பிடியும் ஊடலை மறைந்து தானே சென்று தழுவிக்கொண்டதாம் தன் தலைவனை! என்ன அழகான கற்பனை!

இவ்வாறு வானத்தில் ஊர்ந்துவரும் இராசி மண்டல அளவிற்கு உயர்ச்சியினையுடையது திருமலை என்பதனை,

" ஒண் சிந்துரத்தை வெறுத்து ஊடும்
பிடிவேழம்
விண்சிங்கம் கண்டணைக்கும்
வேங்கடமே "

என்று கற்பனை நயம்படக்கூறுகின்றார்.

(சிந்துரம்—ஆண்யானை: பிடி—பெண் யானை; விண்சிங்கம்—சிம்மஇராசி)

## கன்னி:

குழலூதி உயிர்களின் மனங்களையெல்லாம் கொள்ளை கொண்ட திருமால் தங்கும் வேங்கடமலையில் மூங்கில்கள் மிகுதி: வானளாவி உயர்ந்து நிற்கும் மலையின்மேல் மூங்கில்கள் மேலும் நீண்டு வளர்ந்துள்ளன. வானத்தில் திரியும் கன்னி வடிவமாக விளங்கும் கன்னி ராசியானது அம்மூங்கிலின் மேலாகப் பொருந்திச் செல்வது, மூங்கிலின்மேல் நின்று கழைக் கூத்தாடும் கழைக் கூத்தாடி போல் தோற்ற மளிக்கின்றதாம். அந்த அளவுக்கு உயரமானது திருமலை. இதனை,

" மாதுமடக் கன்னிகழை வந்தணுகிக்
கம்பத்தின்
மீதுநடிப்பாள் ஒக்கும் வேங்கடமே"

என்கின்றார். (கன்னி-கன்னி ராசி; கழை-மூங்கில்).

## துலாம்:

அன்பர் அகமாம் தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமாலின் திருவேங்கடமலையில் நிலை பெற்ற குடிகளாகிய குறவர்கள் மிகுதியும் வாழ்கின்றனர்; குறிஞ்சி நிலமல்லவா? அவர்கள் அம் மலையில் மின்னுகின்ற நவமணிகளைப் பெரிதும் எடுத்து, அம்மணிகளின் நிறையினைப் (எடை) பார்க்கத் தராசு வேண்டும் எனத் தேடுகின்றனர். கானகத்தில் ஏது தராசு? எனவே, வானத்தில் செல்லும் தராசுவடிவமான துலா ராசியினிடத்திலே மணிகளை வைத்து நிறுத்துப் பார்க்கின்றனராம். என்ன சுவையான கற்பனை. மலையில் நின்றே வானத்தைத் தொடும் அளவிற்குத் திருமலை உயர்ந்தது என்பதனை,

" மன்னு குடிக்குறவர் வானூர்
துலாத்திடையே
மின்னு மணிநிறுக்கும் வேங்கடமே"

எனப் பாடுகின்றார்.

## தனுசு:

வேங்கடமலையில் குறவர்கள் தினைக் கொல்லையைக் காக்கின்றனர்; அப்பொழுது இரவு நேரம்! வானத்திலே நிலா உலா வருகின்றது. நிலாவினுள் உள்ள களங்கம் மான் போன்று தோன்றுகின்றது. அந்த மான் வடிவைப் பயிரை மேய வருகின்ற மானென்று கருதி அதனை அம்பெய்து விரட்டவில்லைத் தேடுகின்றனர். வில்லோ, உடன் அகப்படவில்லை. எனவே, வானத்தில் வலம்வரும் வில் வடிவமான தனுர் ராசியைக் கைவில்லாகக் கொண்டு, அம்பினை எய்ய முயலுகின்றனராம். அந்தத் தனுர் ராசியைக் கையில் பற்றும் அளவிற்கு உயர்ந்தது அம்மலை என்பதனைக்

" கொல்லைக் குறவர் குளிர்மதி மானைக்
ககன
வில்லைக்குனித்தெய்யும்வேங்கடமே"

என்று விளக்குகின்றார்.

## மகரம்:

திருமலையை மலர்மலை என்றே சொல்லலாம்; அந்த அளவிற்குப் பல்வேறு வித மலர்கள் மிகுதி! அங்கு உள்ள காடுகளில் வளரும் நீண்ட வலிய மூங்கிலின் உச்சியில் தேனீக்கள் வட்டவடிவமான பெரிய, அகன்ற தேன் கூடுகளைக் கட்டியுள்ளன; தேன் கூடுகளைக் கொண்டுள்ள மூங்கிலுக்கு நேராக வருகின்ற மகரராசி, மன்மதனது 'சுறவக் கொடி' போன்று உள்ளதாம். மன்மதன் சுறுமீன் வடிவத்தைக் கொண்ட கொடியை யுடையவன்; ஆதலால், அவனை 'மகரத்வஜன்' என்றும் 'சுறவக் கொடியோன்' என்றும் அழைப்பர்.

## அறிவிப்பு

14-2-78 அன்று திருமலையில் சலகட்ல ரத சப்தமி நடைபெற உள்ளதால் ஆர்ஜித சேவைகளான வசந்தோற்சவம், கல்யாணோற்சவம், பிரம்மோற்சவம், தெப்போற்சவம், ஊஞ்சல் சேவை, அமந்த்ரணோற்சவம் (13-2-78 அன்று இரவு நடைபெறும் ஏகாந்த சேவையும் உள்ளிட்டு) ஆகியவை நடைபெறா. ஆனால் சம்பந்தப்பட்ட வாகன சேவைகள் மட்டும் நடைபெறும்.

## கும்பம்:

திருமலையில் செழித்து வளர்ந்துள்ள உயர்ந்த மரங்களிற் கட்டப்பட்டுள்ள தேன் கூடுகளானவை, வானத்திற் செல்லுகின்ற பிறைச்சந்திரனது வளைந்த கொம்பின் நுனிபடுதலால் உடைந்து ஒழுகுகின்றது! அவ்வாறு ஒழுகுகின்ற தேன் ஆனது, வானத்தி லுள்ள குடவடிவமாக உள்ள கும்ப ராசியின் வாயளவும் நிறைந்து வழி கின்றதாம்! அந்த அளவிற்கு உயர்ந் தது என்பதனை,

'' ஒண்கொம்பில் தேன்இறால் ஊர்
பிறைக் கோட்டால் உடைந்து
விண்கும்ப வாய்நிறைக்கும் வேங்
கடமே''

எனப் பாடுகின்றார்.

## மீனம்

திருமலையின்மேல் திருக்கோயிலுக்கு அருகிலுள்ள முக்கியமான தீர்த்தம் 'கோனேரி' தீர்த்தம்; இது ''ஸ்வாமி புஷ்கரணி'' எனவும் வழங்கப்பெறும். வானத்திற் செல்லுகின்ற மீன் வடிவ மாய்த் தோன்றும் மீனராசியினது நிழல் தெரிய அதனை நீரில் வாழும் உண்மையான மீனென்று கருதி உண் ணும் பொருட்டுக் குருகு தன் அல கினாற் கொத்துமாம்; இத்தகு சிறப் புடையது திருவேங்கடம். இதனைக்,

'' கூனல்இள வெண்குருகு கோனேரி
யில் விசும்பூர்
மீனநிழலைக் கொத்தும் வேங்கடமே''

எனக் கூறுகின்றார். (குருகு-நீர்ப் பறவை; கோனேரி-ஸ்வாமி புஷ் கரணி).

## மூலம்:

திருமலையில் குரங்குகள் அதிகம்; அக் குரங்குகளில் ஆண் ஒன்று, பெண் ஒன்று கணவனும் மனைவியுமாக வாழ்ந்து வந் தன. ஒரு நாள் பெண் குரங்கானது மண்ணில் விளையும் கிழங்கினை உண்ண ஆசை கொண்டு, தன் காதலனைப் பார்த்து ''மண்-மூலம்தா'' என்று கேட்டதாம். அந்நிலையில் வானத்தில் ஊர்ந்துவரும் மூல நட்சத்திரமானது இதனைக்கேட்டு, எங்கே மந்தியின்மேல் காதல் கொண்ட கடுவனனது தன்னைப் பிடித்து, 'மந்தியின் கையிற் கொடுத்து விடுமோ' என்று அஞ்சியதாம். இவ் வருணனையில், திருமலையானது வானத்து நட்சத்திர வீதிக்கு அருகே இருக்கும்படி ஓங்கி உயர்ந்தது என்பது விளங்க,

'' மண்மூலம் தாவென்று மந்தி கடு
வற்கு உரைப்ப
விண்மூலம் கேட்டேங்கும் வேங்கடமே''

என்று பாடுகின்றார். (மூலம்-கிழங்கு, மூல நட்சத்திரம்; மந்தி-பெண் குரங்கு, கடுவன்-ஆண் குரங்கு).

## அவிட்டம்:

அத்திருமலையில் வளமான சோலை கள் உண்டு. அச்சோலைகளில் உள்ள சந்தன மரங்களில் சிந்தூரப் பவள வாய் மங்கையர் ஊசலாடுகின்றனர். அம்மகளிர் ஊசலை உந்தி ஆடுந் தோறும், அவர்களின் பஞ்சு மலர்ப் பாதங்கள் வானத்திலுள்ள அவிட்ட நட்சத்திரத்தின் மீது பட்டு, தொட்டு இறங்குமாம். இத்தகு உயரமுடையது என்பதனை,

'' நாலவிட்ட பொன்னூசல் நன்னுதலார்
உந்துதொறும்
மேல்அவிட்டம் தொட்டிழியும் வேங்
கடமே''

என்கின்றார். (நாலவிட்ட - தொங்க விட்ட; நன்னுதலார் - நல்ல நெற் றியை உடைய பெண்கள்; இழியும்- இறங்கும்).

இவ்வாறு கற்பனை நயம்படப்பாடிய தனால்தான், 'அழகிய மணவாளதாசர்' ஆன்றோர்களால் 'திவ்வியகவி' எனப் போற்றப்படுகின்றார். 'திவ்வியகவி' என்ற பட்டம் இவர் ஒருவருக்கே இலக்கிய உலகிலும், பக்தி உலகிலும் உரிமையாக வழங்கப் பெற்று வரு கின்றது.

இது மட்டுமா? இவர்தம் கற்பனை திருவேங்கடமாலை நூல் முழுவதும் அழகுறப் பொலிகின்றது.

## கற்பனை வளம்:

திருமலையில் உள்ள தென்னை மரங் களிலிருந்து 'இளநீர்கள்' கீழே விழு கின்றன; அவ்வாறு விழுவதால் மண் ணிலிருந்து சிதறுகின்ற செம்மணி களைக் கண்டு 'நெருப்போ' என்று அஞ்சி விலகி ஓடுகின்றனவாம் யானை கள்.

மாங்குயில்கள், மாமரத்தின் இனிய தளிரை உண்டதனால் கொழுத்துக் கருடன்போல் கூவுகின்றனவாம்.

நிலவின்கண் வாழ்கின்ற மான், முழங்குகின்ற குரலையும் பிளந்த வாயையும் உடைய கொடிய கான கத்துப் புலியைக் கண்டு ஏங்குகின்ற தாம்! மூங்கிலின் உச்சியிலே கட்டப் பெற்ற தேனிறால் விண்ணுலகத்து நிலைக்கண்ணாடியாம்!

வெண்ணிறப் பாக்குமரப் பாளைகள் காற்றில் அசைதல் கதிரவனுக்கு வெண்சாமரம் வீசுவதுபோல் உள்ள தாம்!

திருமலையில் வாழும் குறிஞ்சி நில வஞ்சியரிடத்தில், தேவர்கள் அமுதத் தைக் கொடுத்து மாற்றாகக் குறிஞ்சித் தேனை வாங்குவார்களாம்! ஏன்?

பிறவிப் பெரும்நோய் தீர்க்கும் எம் பெருமான் விரும்பி உறையும் திருமலை யன்றோ அது? எலவேதான், இற வாமை நல்கும் அமுதத்தைக் காட் டிலும், திருமலையில் கிடைக்கும் தேன் எல்லாவகையிலும் உயர்ந்ததும், சிறந் ததும், புனிதமானதும் ஆம் என்க!

இதனாற்றான் பெரியோரும் திருமலை யில் வாழும் வண்டாகவாவது இருக்க வேண்டும்; பிறக்கவேண்டும் என்று உரைத்தார்போலும்!

இவ்வாறு கற்பனை வளம்படத்- தேனடையில் தொட்ட இடமெல்லாம் தித்திப்பதுபோலத்– திருவேங்கடவன் உறையும் திருமலையைத் 'திவ்யகவி' அவர்கள் சிறப்பாகப் பாடிப் பக்திக் கடலில் மூழ்கிக், கற்பவர் இதய மெலாம் களிப்படையச் செய்கின்றார்.

இத்தகைய இனிய பாடல்களை இன் னும் கொண்ட 'திருவேங்கடமாலை யை'க் கற்றுத் திருமலையில் உறையும் திருவேங்கடவனின் அருமை பெருமை களை உணர்வோமாக! 

# அனுமன் கதை



## 14. கண்டதைச் சொன்னான்!

"கண்டனென் கற்பினுக் கணியைக்
கண்களால்
தெண்டிரை அலைகடல் இலங்கைத்
தென்னகர்
அண்டர்நா யக இனித் துறத்தி
ஐயமும்
பண்டுள துயரும் என் றனுமன்
பன்னுவான்."

58, திருவடி தொழுத படலம்,
சுந்தர காண்டம்.

இலங்கையைத் தன் வாலால் சுட்டெரித்த அனுமன் விரைவில் இலங்கைமா நகரை விட்டு நீங்குதற்கு எண்ணினான். அருகிலிருந்த குன்று ஒன்றின் மேல் நின்றான். தனது தலைவனை இராமபிரானை மனத்தினால் தொழுதவாறே அங்கிருந்தும் புறப்பட்டு வான் வழியே விரைந்து சென்றான்.

வழியில் எதிர்ப்பட்ட மைந்நாக மலைக்கு இலங்கையில் நடந்தவற்றையெல்லாம் விளக்கமாக எடுத்துக் கூறினான். அனுமன் இலங்கையை நோக்கிச் செல்லும்பொழுது தன்மீது தங்கி இளைப்பாறிச் செல்லுமாறு முன்னர் மைந்நாகமலை வேண்டிக் கொண்டதல்லவா? திரும்பி வரும் பொழுது தங்கிச் செல்லுவதாக அனுமன் மைந்நாக மலைக்கு உறுதிமொழி தந்தானல்லவா? அதற்கேற்பவே, அனுமன் இப்போது மைந்நாகமலையிடம் தங்கிச் செய்திகளைச் சொல்லித் தன் வாக்கைக் காப்பாற்றிக் கொண்டான். பின்னர், அங்கிருந்து புறப்பட்டுத் தன் வரவை ஆவலுடன் எதிர் நோக்கியிருக்கும் வானரர்கள் தங்கியிருக்கக் கூடிய மகேந்திர மலையில் தாவிக் குதித்தான்.

"கடல் கடந்து சென்ற அனுமன் இனிதாக மீண்டு வரவேண்டுமே!" என்ற கவலையாலும், "அனுமனுக்கு எதுவும் நேர்ந்துவிடக் கூடாதே" என்ற அச்சத்தாலும் வானர வீரர்கள் அனுமனின் வருகையை ஆவலுடன் நோக்கியிருந்தனர். அனுமன் வருகையைக்கண்டதும் அங்கதன் முதலானோர் தாய்ப் பறவையைக் கண்ட பறவைக் குஞ்சுகளைப்போலப் பெருமகிழ்ச்சி கொண்டார்கள். உவகை மிகுதியினால் செய்வதறியாது நின்ற வானரவீரர்கள் சிலர் மகிழ்ச்சியினால் அழுதார்கள்; சிலர் ஆரவாரஞ் செய்தார்கள்; சிலர் வணங்கினார்கள்; சிலர் துள்ளிக் குதித்தார்கள்; சிலர் கூத்தாடினார்கள்; சிலர் கட்டித் தழுவிக் கொண்டார்கள்; சிலர் அனுமனைத் தம் தோள்மேல் தூக்கிக் கொண்டு ஆடிப் பாடினர். சிலர் இனிய காய்கனிகளைக் கொண்டுவந்து அன்புடன் உபசரித்தனர்.

அனுமனின் தாள்களிலும், மார்பிலும், தோளிலும், கைகளிலும் பல வகை ஆயுதங்களால் உண்டாக்கப்பட்ட புண்கள் இருப்பதைக் கண்டு அங்கதன் முதலானோர் பெரிதும் வருந்தினர். வாலியின் புதல்வனை அங்கதனை அனுமன் முதலில் வணங்கினான். பின்னர், கரடிகட்குத் தலைவனை சாம்பவானைச் சாஷ்டாங்கமாக வணங்கினான். முறைப்படி மற்றவர்களுக்கும் வணக்கம் செலுத்தினான். "இங்கே இருக்கும் வானர வீரர்கட்கெல்லாம் மங்களமுண்டாக வேண்டும் என்று இராமபிரானின் பத்தினியாகிய சீதா பிராட்டியார் வாழ்த்துக் கூறி அனுப்பினார்" என்பதையும் அனுமன் அவர்களுக்கு எடுத்துச் சொன்னான்.

திரு. மா. சீதாராமன், M.A, B.Ed.,
பெருங்கட்டூர்.

மகேந்திர மலையிலிருந்து சென்றது முதல் இலங்கை சென்று மீண்டது வரையில் விளக்கமாக எடுத்துச் சொல்லுமாறு வானர வீரர்கள் அனுமனை வேண்டிக் கொண்டனர்.

சீதா பிராட்டியின் கற்பொழுக்கத்தையும், பிராட்டியார் தந்த சூளாமணி என்னும் அடையாளத்தைத் தான் பெற்று வந்ததையும் அனுமன் விளக்கமாகச் சொன்னான். ஆனால், தான் அரக்கர் பலரைக் கொன்றதையும், இலங்கை நகருக்குத் தீ வைத்து மீண்டதையும் சொல்லாது விட்டுவிட்டான். தன்னைத்தானே புகழ்தல் தகுதியன்று என்பதாலேயே சொல்லாது விட்டு விட்டான். என்றாலும், அவன் உடம்பின் புண்கள் அவன் போர்த் தொழிலைத் தங்கட்டுக்குக் கூறுவதாக வானரர்கள் அனுமனிடம் கூறிப்புகழ்ந்தனர்.

"இனி நாம் செய்ய வேண்டியது என்ன?" என்று வானர வீரர்கள் அனுமனை வினவினர். "இராமபிரான் இருப்பிடம் சார்ந்து, பிராட்டியின்

நிலையைக் கூறி இராமபிரானின் துயரத்தைத் தீர்த்தலே நாம் செய்யத்தக்க செயல்!'' என்று அனுமன் கூற, அனைவரும் விரைவில் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போனார்கள். உச்சி வெயிலில் மதுவனத்தை யடைந்தார்கள். வானர சேனைகளின் பசி தீர மது அளிக்குமாறு வானரத் தலைவர்கள் அங்கதனை வேண்டிக் கொண்டார்கள். அங்கதனும் அனுமதி அளித்தான். மதுவனத்தில் இருந்த தேனைத் தம் மனம்போல உண்ட வானரர்கள் மதுவின் மயக்கத்தினால் களியாட்டம் போட்டார்கள். மது வனத்தை வானரர்கள் அழிப்பதைக் கண்ட சோலைக் காவலர்கள் தமது தலைவனான ததிமுகனிடம் இச் செய்தியைச் சொன்னார்கள். இரண்டு கோடி வானரங்களுடன் அச்சோலைத் தலைவனான ததிமுகன் மதுவனத்துக்கு வந்தான். சினத்துடன் ததிமுகன் வருதலைக் கண்ட வானர வீரர்கள் ஓடிப்போய் அங்கதன் அடிகளில் வீழ்ந்து வணங்கினர். அங்கதன் ததிமுகனை அடித்துத் துரத்தினான். ததிமுகனுடன் வந்த வானரர்கள் குத்துண்டு தப்பித்துச் சென்றார்கள். பின்னர் அங்கதன் முதலானோர் இனிதே மதுவனத்தில் இளைப்பாறி வெயில் குறையும் சமயத்தை எதிர்நோக்கியிருந்தனர்.

சீதையைத் தேடுமாறு வானர வீரர்களை அனுப்பிய சுக்ரீவன் இராமனுக்குத் தேறுதல் கூறிக் கொண்டிருந்தான். சீதையை நினைக்கும் போதெல்லாம் சோகத்தால் இராமன் மூர்ச்சையானான். வடக்கு, கிழக்கு, மேற்கு ஆகிய முத்திசைகளிலும் சென்ற வானரர்கள் பிராட்டியைக் காணாது வறிதே திரும்பினர். ஆனால், தெற்கே சென்ற வானரர்கள் மட்டும் இன்னும் திரும்பவில்லை. எனவே, அனுமன் பிராட்டியைக் கண்டு திரும்புதல் உறுதியென்பதில் இராமனுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்ததால், இராமன் உயிரோடு வாழ்ந்து கொண்டிருப்பவனானான். எனினும், இராமனுக்கு, ஓர் ஐயம் ஏற்பட்டது. "ஒரு மாதத்துக்குள்ளாகவே சீதையைத் தேடிக் கண்டுபிடித்துத் திரும்பி வரவேண்டும் என்ற தவணையோ சென்று விட்டது. ஆனால், தென் திசை நோக்கிச் சென்ற வீரரோ திரும்பவில்லை. அவ்வானர வீரர்கள் தவணை நாள் கடந்துவிட்டதற்கஞ்சித் தம்முயிரைத் துறந்திருத்தல் கூடுமோ?'' என்று இராமன் சுக்ரீவனிடம் கூறிக் கொண்டிருந்தான்.

இராமனும் சுக்ரீவனும் இங்ஙனம் பேசிக்கொண்டிருக்கையில், இரத்தம் சொட்டச் சொட்டத் ததிமுகன் அங்கே வந்து சேர்ந்தான். மதுவனம் அழிவுற்ற செய்தியைச் சுக்ரீவனிடம் கூறினான். இது கேட்ட சுக்ரீவன் "இச் செயல் மகிழ்ச்சிக்கு அறிகுறியே!'' என்று இராமனிடம் கூறினான். நடந்து முடிந்த செயல்களை விவரமாகத் ததிமுகன் சுக்ரீவனிடம் கூறினான். ததிமுகனுக்குச் சுக்ரீவன் ஆறுதல் மொழிகளைக் கூறியனுப்பி வைத்தான்.

தவணை நாட்கள் கழிந்து போனதை எண்ணிய வானர வீரர்கள் அனுமனை முதன்முதலாக விரைவில் செல்லுமாறு இராமனிடம் அனுப்பி வைத்தனர். அனுமனை இதுவரையிலும் காணாத இராமபிரான், ''வானரர்கள் பிராட்டியை உயிருடன் பார்த்தோம் என்று கூறுவார்களோ? அல்லது இவ்வுலகில் இல்லை. மேல் உலகத்தில் இருக்கக்கூடும்! என்று கூறுவார்களோ? யாதும் தெரியவில்லையே! '' என்று சுக்ரீவனிடம் கூறி வேதனைப் பட்டுக் கொண்டிருந்தான்.

இவ்வாறு இராமன் கூறிக் கொண்டிருக்கும்போது, அனுமன் தென்திசையிலிருந்து வருவதை இராமபிரான் பார்த்துவிட்டான். அனுமனும் இராமபிரான் இருப்பிடம் வந்துசேர்ந்தான். வந்தவன் இராமபிரானை வணங்கவில்லை. தலைமேல் கூப்பிய கைகளையுடையவனாய்த் தென் திசை நோக்கித் தன் ஆறு அங்கங்களும் தரைமேல்படியுமாறு வீழ்ந்து வணங்கி வாழ்த்தினான். இதனைக் குறிப்பால் உணர்ந்துகொண்ட இராமபிரானின் உள்ளம் பெரிதும் உவகையடைந்தது. அவன் தோள்கள் பூரித்தன; கண்களி

லிருந்து மகிழ்ச்சிக் கண்ணீர் பெருகியது. பிரிவுத்துன்பம் நீங்கிப் போயிற்று; சீதையிடம் கொண்ட அன்பு அதிகரித்தது.

பிராட்டியைத் தான் அசோக வனத்தில் கண்ட காட்சியை அனுமன் தன் அறிவு நலம் வெளிப்படுமாறு அற்புதமாகக் கூறலானான். 'சீதையை' என்று ஆரம்பித்தால் 'சீதையைக் கண்டானோ? இல்லையோ?' என்ற ஐயம் இராமனுக்கு ஏற்படும். ஆதலால் 'சீதையை'எனத் தொடங்காமல், 'கண்டேன்' என்றே தொடங்குகிறான். வால்மீகி இராமாயணத்திலும் "த்ருஷ்டா ஸீதா" என்றே குறிக்கப்படுதலைக் காண்கிறோம். 'கண்டேன்' என்று மட்டும் கூறிவிட்டால், அனுமனால் காணப்பட்ட சீதை கற்புடன் இருக்கிறாளா? இல்லையா? என்ற ஐயம் தோன்றுதல் இயல்பேயன்றோ? எனவே 'கற்பினுக் கணியை' என்ற தொடரை அடுத்துப் பயன்படுத்துகிறான்.

பிராட்டியார் கற்புடன்தான் இருக்கிறார்' என்பது அனுமனுக்கு எவ்வாறு தெரியும்? என்ற ஐயம் அடுத்து இராமபிரானுக்குத் தோன்றக் கூடும். அதற்குரிய தெளிவை ஏற்படுத்தவே, 'கண்களால்' என்ற சொல்லை அதனையடுத்துப்பயன்படுத்துகிறான். பிராட்டியின் கண்களாலேயே, பிராட்டி கற்புடன் இருப்பதை அனுமன் உணர்ந்து கொள்கிறான். சிறைப்பட்டிருக்கும் சீதை ஸ்ரீராமனையே நினைந்து நினைந்து கண்களில் நீரை ஆறாய்ப் பெருக்கிக் கொண்டிருக்கிறார். இராவணன் எண்ணத்துக்கு இசைந்து விட்டிருந்தால், சீதையின் கண்கள் நீரைச் சொரிந்திருக்கா! நிம்மதியாகத் தூங்கியிருக்கும், நீரை வெளிப்படுத்தும் கண்களாலேயே பிராட்டியின் கற்பு நெறியை எளிதில் புரிந்து கொள்ள முடிகின்றது. எனவேதான், 'கண்களால்' என்ற சொல்லை அடுத்து முறைப்படப் பெய்துள்ளான் அனுமன்.

பிராட்டியைத் தன் கண்களால் அனுமன் கண்டான் என்பதில் பொருட் சிறப்பில்லை. பிராட்டியின் கண்களாலேயே பிராட்டியாரின் கற்பு நிலை தவறாத பொற்பு நெறியினைக் கண்டான் அனுமன் என்பதினாலேயே ஆழ்ந்த பொருள் இருப்பதைக் கண்டு வியக்கிறோம்.

இவ்வாறு, அனுமன் இராமபிரானின் உள்ளம் தெளிவடையும் வகையில் மிக அற்புதமாகச் சொற்களைப் பயன்படுத்தும் சொல்லாற்றலைக் காணும்போது, அனுமன் 'சொல்லின் செல்வன்' என்பதை ஐயந்திரிபறத் தெரிந்து கொள்கின்றோமல்லவா?

"கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்!" என்று முறைப்படக் கூறத் தொடங்கிய அனுமன், "தெண்டிரை அலைகடல் இலங்கைத் தென்னகரில்" பிராட்டியார் இருப்பதைக் கூறுகிறான். எனவே, அண்டர் நாயகனை இராமபிரானிடம் 'பிராட்டி எவ்வாறு இருக்கிறாரோ?' என்ற "ஐயமும் துறத்தி!", பிரிவால் கொண்டுள்ள, "பண்டுள துயரும் துறத்தி!" என்று அனுமன் பன்னிப் பன்னிக் கூறலானான்.

"ஐயனே! என் தெய்வமாகிய பிராட்டியார் தங்களது தகுதிக்கும், அவர் பிறந்த குலத்துக்கும் புகுந்த குலத்துக்கும் ஏற்பச் சிறந்த ஒழுக்கத்தையுடையவராகவே இருக்கின்றார்கள். பொன்னுக்கு ஒப்பாகச் சொல்லக் கூடியது பொன்னையன்றி வேறு ஒன்றும் உண்டோ? அதுபோல, பொறுமைக் குணத்தால் பிராட்டியார் தன்னையொப்பார் வேறு எவரும் இல்லையென்று உலகோர் கூறும்படிச் சிறந்து நிற்கின்றார்கள். தம் கற்பு நிலையிலிருந்து பிராட்டியார் மாறுபாடு கொள்ளாமையினால் அவர் குலத்துக்கும், உம் குலத்துக்கும் பெருமையைத் தேடித்தந்திருக்கிறார்கள்.

வீரனே! இலங்கைமாநகரில் கற்பொழுக்கத்தோடு கூடிய பிராட்டியையா நான் கண்டேன். இல்லவே இல்லை! உயர் குடிப்பிறப்பு, பொறுமை, கற்பு என்னும் உயர்ந்த குணங்களே பிராட்டி வடிவத்தில் வீற்றிருத்தலைக் கண்டேன். மனம், மொழி, மெய் ஆகிய முக்கரணங்களாலும் பிராட்டியார் உம்மை விட்டுச் சிறிதும் பிரியாதிருக்கின்றார். அப்படியிருக்க, உம்மைப் பிரிந்து பிராட்டியார் வாழ்கின்றார் என்பது எப்படிப் பொருத்தமாகும்?

ஐயனே! தவவடிவாகிய பிராட்டியார் இலங்கை மாநகரில் கற்பகச் சோலை ஒன்றில் சிறை வைக்கப்பட்டிருக்கிறார்கள். தங்களின் தம்பியாகிய இலக்குமணப் பெருமாள் புற்களினால் அமைத்த பரிசுத்தமான பர்ணசாலையிலேயே தேவியார் வீற்றிருக்கிறார்கள். இராவணனால் பிராட்டியாரைக் கையினாலும் தீண்டமுடியாது. ஏன் தெரியுமா?

முன்னொரு காலத்தில் பிரமதேவனை வழிபடுவதற்காகப் புஞ்சிகஸ்தலை என்னும் பெயருடைய அப்சரஸ்மாது ஒருத்தி சென்று கொண்டிருந்தாள். வான் வழியே சென்று கொண்டிருந்த இராவணன் அவளைக் கண்டு காமுற்று வலியக் கற்பழித்து விட்டான். களங்கமுற்ற நிலையுடன் அந்த அப்சரஸ் வருதலை நான்முகன் உணர்ந்து கடுங் கோபங்கொண்டான். இராவணனை நோக்கி, "இனி நீ பிறமாதரை வலியக் கற்பழிக்க முயன்றால், அப்பொழுதே உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்!" என்று பிரமன் சாபம் கொடுத்துவிட்டான். எனவே, இராவணன் தேவியாரை இதுவரையிலும் தீண்டவேயில்லை.

அவன் பிராட்டியைத் தீண்டியிருப்பானால் ஆகாயம் பிளந்திருக்கும்; ஆதிசேஷன் தலை கிழிந்திருக்கும் கடல்கள் ஏழும் பொங்கியிருக்கும்; வானிலுள்ள சுடர்கள் யாவும் விழுந்திருக்கும்; வேதமும் வைதிகச் செயல்களும் அழிந்து போயிருக்கும். இவையாவும் நிகழாமையிலிருந்தே இராவணன்

பிராட்டியைத் தொடவில்லையென்பது தெரிகிறதன்றோ!

தங்கள் தேவியார் கற்புநிலை குன்றா திருத்தலால் இந்திராணி, சரசுவதி, உமாதேவி, இலக்குமி போன்ற தேவ மாதர்களும் பெருஞ்சிறப்படைந்திருக்கின்றனர். பிராட்டியார் இராவணனது மாளிகையில் இருக்கவில்லை. புறத்தே இருக்கின்ற அசோகவனத்தில் கண்ணீர்க் கடலிடையே இருப்பதைக் கண்டேன். தனித்திருக்கின்ற தேவியாரைச் சுற்றிலும் கொடிய அரக்கர்கள் காவல் புரிந்து கொண்டிருக்கின்றனர். தங்களிடம் பிராட்டியார் கொண்டுள்ள அன்பே, அவரது அச்சத்தைப் போக்குவதாக உள்ளது. கற்பு நெறியிலிருந்து ஒரு சிறிதும் கலங்குதலில்லாத பிராட்டியாருடைய பெருங்காதலைக் காணும் வாய்ப்புப் பெற்றமையால் தாங்களே ஆண்களுக்குள் சிறந்தவராகின்றீர்!

ஐயனே! நான் பிராட்டியைக்கண்டு வணங்குதற்கேற்ற சமயத்தை எதிர்நோக்கியிருந்தேன். அப்போது இராவணன் அங்கே வந்தான். தன் இச்சைக்கு இணங்குமாறு பிராட்டியை வணங்கி நின்றான். ஆனால், பிராட்டியாரோ கடுஞ்சொற்கள் கூறி அவனை வெறுத்தார். இதனால் வெகுண்ட இராவணன் பிராட்டியைக் கொல்லத் துணிந்து விட்டான். அப்பொழுது, பிராட்டியின் கற்புநிலையும் தங்களது கருணையும் தூய்மையான நல்ல அறமும் பிராட்டியைக் காப்பாற்றி நின்றன. அப்பொழுது இராவணன் அரக்கியரை நோக்கி, ''நீங்கள் புத்திமதி சொல்லி என்கருத்துக்கு இவளை இணங்கச் செய்யுங்கள்!'' எனக் கூறிவிட்டுப் போய்விட்டான். பின்னர், என் மந்திரத்தின் வலிமையால் அரக்கியர் அனைவரும் தூங்கிப் போய்விட்டார்கள்.

அப்போது, பிராட்டியார் தம் உயிரை விட்டுவிட எண்ணிக் கொடி ஒன்றை யெடுத்து மரக்கிளையிலே உறுதியாகக் கட்டித் தனது கழுத்திலே சுருக்கிட்டுக் கொள்ள முற்பட்டனர். அப்போது, நான் தங்கள் திருநாமத்தைக் கூறித் தடுத்துப் பிராட்டியாரின் திருவடிகளை வணங்கினேன். மாயத்தில் வல்ல அரக்கர்களுள் ஒருவனே என்று என்னைப் பிராட்டியார் முதலில் ஐயுற்றார். பின்னர், தாங்கள் கூறிய அடையாளங்கள் அனைத்தையும் நான்பிராட்டியாரிடம் கூறினேன். அவற்றைக் கேட்டு மனந்தெளிந்த பிராட்டியாரிடம் தாங்கள் கொடுத்தனுப்பிய கணையாழியைக் கொடுத்தேன். அக்கணையாழி மிருத சஞ்சீவி மருந்தைப் போன்று அன்னையின் உயிரை நிலைபெறச் செய்தது.

அப்போது நான் ஓர் அற்புதத்தைக் கண்டேன்! ஒரே காலத்தில் இரண்டு நிகழ்ச்சிகள் நடைபெற்றன. நான் கொடுத்த தங்கள் மோதிரத்தைப் பிராட்டியார் வாங்கித் தன் மார்பில் வைத்துக் கொண்டபோது, பிரிவு என்னும் வெப்பத்தால் அம்மோதிரம் இறுகிப் பழைய நிலைக்கே வந்துவிட்டது. அம்மோதிரத்தைக் கையில் வாங்கிய பிராட்டியார் ஒன்றுமே பேசவில்லை. மகிழ்ச்சியால் அன்னையின் உடல் பூரித்தது; நோக்கின கண்களை மூடாமல் பார்த்துக் கொண்டேயிருந்தார்; பெருமூச்செறிந்தார்.

தலைவனே! தங்களைப் பிரிந்த பின்பு நேர்ந்த செய்திகளையெல்லாம் பிராட்டியார்க்குத் தெளிவாகவும் முறையாகவும் கூறினேன். அதன் பின்னரே பிராட்டியார் உயிர் நீங்காதிருக்கப் பெற்றார். இவ்விடத்திலுள்ள தன்மைகளையெல்லாம் நான் எடுத்துக் கூற அதை அன்னையார் ஆவலோடு கேட்டார்கள். அவ்விடத்திலுள்ள தன்மைகளையெல்லாம் அடியவனாகிய என்னிடம் விளக்கமாகக் கூறினார் அன்னையார்.

'இன்னும் ஒரு மாத காலமே உயிரோடிருப்பேன்! அதற்குள் அவர் வந்து என்னை அழைத்துப் போக மனமில்லையென்றால் நான் உயிர் துறப்பேன்!' என்று தாங்கள் இருக்கும் திசை நோக்கித் தங்களுக்கு வணக்கம் செலுத்தினார்கள். அதன்பின், அன்னையார் தம்முடைய ஆடையில் முடித்து வைத்திருந்த சூளாமணியை எடுத்து என்னிடத்தில் இனிதாகத் தந்தார். இதோ பாருங்கள் அந்தச் சூளாமணியை!'' என்று கூறி அனுமன் சூளாமணியை இராமபிரானிடம் தந்தான்.

அச்சூளாமணியை இராமபிரான் தன் கையால் தொட்டபோது, திருமணக் காலத்தில் சீதையின் கையைத் தொட்டபோது ஏற்பட்ட இனிய உணர்வை இப்பொழுது அடைந்தான். இராமனின் உடலிலுள்ள உரோமங்கள் சிலிர்த்தன; கண்களில் நீர் பெருகியது. மற்றும் தோளும் பூரித்துத் துடித்தது; வேர்வைத்துளிகள் உண்டாயின; அழகிய வாயானது மடிப்பு அடைந்தது; உயிர் போவதும் வருவதுமாக இருந்தது; உடல் பூரித்தது.

அப்போது, அங்கே தன் முதலான படைத்தலைவர்கள் இராமபிரானையும் சுக்ரீவனையும் வணங்கி நின்றனர். தங்களின் செயல் வெற்றி பெற்றமையை எண்ணிப் பூரிப்புடன் நின்றார்கள். சுக்ரீவன் இராமபிரானை நோக்கி, ''ஐயனே! பிராட்டியை நாம் எளிதாகக் கண்டு கொண்டோம்.'' என்று கூறினான். இவ்வாறு சுக்ரீவன் கூறியதும் ''சீதை இருக்குமிடம் தெரிந்தும் இன்னும் காலம் தாழ்த்துகின்றாயே!'' என்று இராமபிரான் கூறினார். அவ்வளவில் படைகள் அனைத்தும் புறப்படுவதற்கான கட்டளையினைச் சுக்ரீவன் பிறப்பித்தான். உடனே, கடல் போலச் சேனைகள் தென்திசை நோக்கிப் புறப்படலாயின.

படைகளுக்கு முன்னே சென்று வழிகாட்டுமாறு இராமன் நீலனுக்குக் கட்டளையிட்டான். தண்தோள்களின் மேல் ஏறிக் கொள்ளுமாறு அனுமன் இராமபிரானை வேண்டிக் கொண்டான். அங்கதன் வேண்டுகோளுக்கேற்பத் தம்பி இலக்குமணன் அங்கதனுடைய தோள்களின்மேல் அமர்ந்து கொண்டான். அப்போது தேவர்கள் கற்பக மலர்களை இராமலக்குமணர்கள் மீது சொரிந்து நல்வாழ்த்துக் கூறினர். வானரசேனை மலைகளின் வழியாகச் சென்றது. வழி நடைக்களைப்புத் தோன்றா வண்ணம், வானர வீரர்களுக்கு இலங்கையில்தான் கண்டவை அனைத்தையும் கதையாகக் கூறிக்கொண்டு அனுமன் அவர்களை மகிழ்வித்தான். அனுமன் சொன்ன கதைகளையெல்லாம் கேட்டுக் கொண்டே வானர சேனைகள் பன்னிரண்டு தினங்களில் தென்திசையிலுள்ள கடலைக் கண்டன.

(தொடரும்)



# பக்தி உள்ளம்

திரு என். கிருபானந்தன், எம்.ஏ.
(இறுதி)
திருப்பதி.

ஜீவாத்மா - பரமாத்மா உறவு மிகவும் புனிதமானது. மாயையில் சிக்கிய ஜீவாத்மா பரமாத்மாவை மறந்து திரியும். பின் திடீரென ஒரு நாள் தன் நிலையை உணரும் ஜீவாத்மா, பரமாத்மாவை இனங் கண்டுகொண்டு அதனோடு ஒன்றிவிடத்துடிக்கும். பக்குவப்படும் வரையில் ஜீவாத்மாவுக்குச் சோதனைக்குமேல் சோதனையளித்துப் பின்னரே பரமாத்மா அதனைத் தன்னோடு இணைத்துக்கொள்ளும். பரமாத்மாவை அடையத்துடிக்கும் ஜீவாத்மா, அதனைக் காண முடியாதபோது பல வித இயற்கைப் பொருள்களை நோக்கி அப்பரம் பொருளைப் பற்றியும் அதனை அடைய வழியையும் கேட்டுப் புலம்பும்.

இந்தத் தத்துவத்தையே, பக்தர்கள் தங்கள் விருப்பமான தெய்வங்களை அடைய விரும்பிக் கண்ணில் தெரியும் அஃறிணைப் பொருட்களைப் பார்த்துப் புலம்புவதாக அமைந்த பாடல்கள் உணர்த்தி நிற்கும்.

இயற்கைப் பொருள்கள் அனைத்தும் ஒழுங்காக, நியமம் தவறாமல் இயங்குவதைக் கண்ட பக்தன், அவ்வாறு அத்துணை இயற்கைப் பொருள்களையும் ஆட்டுவிக்கும் சக்தி படைத்த ஒரு மாபெரும் சக்தி—கடவுள் ஒன்று இருத்தல் வேண்டும் என்று உணருகிறான். அப்படியாயின் அப்பரம் பொருள் என்ன? எப்படிப்பட்டது? என்று அறிய ஆவலுறும் அவன், இயற்கை அக்கடவுளின் ஏவலின்படி நடைபெறுவதால் இயற்கைப் பொருள்கள் கடவுளைப் பார்த்திருக்கும், அறிந்திருக்கும் என்ற எண்ணத்துடன் அவ்வியற்கைப் பொருள்களையெல்லாம் பரம்பொருளைப் பற்றிக் கூறுமாறு வேண்டிப் புலம்புகிறான். அப்பரம்பொருளை அறிந்து அதனுடன் ஒன்றிவிடவேண்டும் என்று மிக்க அவாவும் கொள்கிறான். அவனது உணர்ச்சி பாடல்களாக வெளிப்படுகிறது.

''ஓ சூரிய சந்திரர்களே! இரவு பகல் என்று மாறி மாறித் தினந்தோறும் நியமம் தவறாது இயங்கும் படியாக உங்களை இயங்க வைத்தவர் யார்? அவருடைய பெருமைதான் என்னே? எனக்குச் சொல்லமாட்டீர்களா? ஓ வீசுகின்ற காற்றே! நீ யாராலேதான் இங்ஙனம் தொடர்ந்து சுழல்கின்றாய்? மழை பொழியும் முகில்காள்! எம்பெருமான் உங்களைப் போல் தாராளமாகக் கருணை பொழிந்து என்னை ஆட்கொள்ளும் வழியினைத்தான் சற்றுச் சொல்லுங்களேன்.

கருதரிய விண்ணே! நீ எல்லாவற்றிற்கும் இடம் கொடுத்துக் கொண்டு எங்குமாகி எவற்றினூடும் கலந்து நின்றனையே! உன் எல்லைக்கப்பால் காட்சி தரும் அப்பொருள் எப்படியிருக்கும்? அதன் தன்மையை அறிவுடைய ஆதி சேடன் சொல்லானோ? எனக்கு அதனைக் கேட்டுச் சொல்வாயா?

திரைக்கை நீட்டி ஒலிக்கின்ற கடலே! இவ்வுலகஞ் சூழ ஒரு கரையுமின்றி உங்களை வைத்தவர் யாரோ?

கானகத்துப் பைங்கிளிகாள்! தாமரை மலரினைச் சுற்றும் வண்டினங்காள்! அன்னப் பறவைகாள்! நீங்களெல்லாம் தூது செல்பவைவற்றுள் சிறந்தவர்களன்றோ? நீங்கள் எப்பொழுதாவது அப்பரம்பொருளிடம் தூது சென்றிருக்கிறீர்களா? அவனுடன் பேசியிருக்கிறீர்களா? அவனைப் பற்றி எனக்குக் கொஞ்சம் சொல்லுங்களேன்'' (தாயுமானவரின் "ஆகார புவனம்'' பாடல்கள் 26, 27, 28) என்றெல்லாம் ஒரு பக்தன் இதயம் துடிக்கின்றது.

இந்த நிலையில் திருமாலை நெருங்கியுள்ள பொருள்களைப் பார்க்கையில் பக்தி உள்ளம் (சற்றுப் பொறாமையுடன்) அப்பொருள்கள் பெற்ற பேற்றினைப் பலவாறு பாடித் தானும் அப் பேற்றினைப் பெறவேண்டும் என்ற அவாவைக் குறிப்பாக உணர்த்துதலும் உண்டு.

கடலைப் பார்த்து,

''ஓ ஆரவாரிக்கும் கடலே! மகுடமானது உதய சூரியனைப்போல ஒளியை

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அதுமட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

# மாதவன் மலையினை மகிழ்ந்து பாடுவோம்!

திரு. சிவ. கிருட்டிணன் – கணியூர்

முன்னைக்கும் முன்னை முதற்பொருளாய் நின்றவனும்!
அன்னை மகிழ்ந்துறையும் அழகான நெஞ்சகத்தான்!
உன்னற் கரிய உயர்நிலையான்! வேதமெலாம்
சொன்ன திருப்பாடற் சொற்பொருளாய் மறைந்துள்ளான்!
இன்ன வடிவென்(று) இயம்பற் கரிதான
இன்ப வடிவானுன்! எழிலானுன்! எண்ணத்தில்
ஒன்றுனுன்! பக்தர்க்(கு) உயிரானுன்! உயர்வான
பொன்மலையாம் வேங்கடத்தில் பொலிகின்ற மாலவனே!

அவதாரம் பத்தால் அகிலம் புரந்தளிப்பான்!
பவகாரணம் யாவும் பறந்தோடச் செய்தபிரான்!
தவமுனிவோர் காணத் தவிக்கின்ற மலர்ப்பதத்தான்!
உவமையொன் றில்லா ஒளிமயமாம் செம்பொருளான்!
கவலைப் பெருநோய்க்குக் கைகண்ட மருந்தானுன்!
பவளவாய் மொழியாலே பார்த்தனுக்குப் போர்க்களத்தில்
எவர்க்கும் வழிகாட்டும் இணையில்லாக் கீதையினை
உவந்துரைத்தான் வேங்கடத்தில் உறைகின்ற மாலவனே!

ஒருபொருளைக் கண்டுவக்க இருவிழியோ பற்றுது!
வரம்பெற்றுல் மூவாசை மாசெல்லாம் வளராது!
புரியாத நான்முகனுர் எழுத்தொன்றும் செய்யாது!
வரவான ஐம்புலனுல் வாழ்க்கையெலாம் நாம்தேடும்
எரியான துயரெல்லாம் இனிமேலும் வாராது!
உருவாகும் அகமலரை உருக்குலைக்கும் அறுபகையும்
பெருவாழ்வை வறிதாக்கும் பெருந்துயரம் நேராது!
பரிந்துநலம் பலசெய்வான் ஏழுமலை மாதவனே!

அணைத்தான் பணைத்தோள்கள் அமுதமுத் தம்பொழிந்தான்!
"துணைநான் இருக்கத் துடியிடையாய், ஏனச்சம்?
குணமே நான்விரும்பும் குற்றமிலாப் பெருஞ்செல்வம்!
மணமார் மலரே, மலர்க்கொடியே, காதலியே,
துணிவாய்!'' என்றுரைத்தான் துயர்போக்கும் விழிமலரான்!
'இணையார், இனியெனக்கு?' என்றேநான் கண்விழித்தேன்;
அணியார் அரவிந்தன் அக்கணமே மறைந்திட்டான்
இணியிலா வேங்கடத்தின் இன்பமணி மாதவனே!

மலையெலாம் வேங்கடவன் மலையாமோ! செய்யதிரு
மலையன்றே முகில்வண்ணன் வாழ்மலையாம்! அவ்வேழு
மலையன்றே பிறவியென வளர்நோய்க்கு மருந்துமலை!
அலைபாயும் உள்ளத்தில் அமைதிதரும் இனியமலை!
அலைவீசும் பாற்கடலின் அழகுமக ளானதிரு
நிலையாக வாழ்கின்ற நெடியமலை; புவியிலுயிர்க்
குலமெல்லாம் போற்றுகின்ற கொடிபறக்கும் பெரியமலை
தலத்திலுயர் வேங்கடவன் தண்ணளியாம் ஏழுமலையே!

உமிழா நிற்க, மனைவியர்களான திருமகளும், மண்மகளும் தன்னை விட்டுப் பிரியாது எப்போதும் தன்னுடன் பொருந்தி நிற்கத் திருவேங்கடவன் மலையின் மீது வாழுகின்ற, கரிய திருமேனியை உடைய திருமால் உன்னிடத்திலே அழகிய நீண்ட திருக்கண்களை மூடி நித்திரை செய்தற்காக நீ என்ன அரும்பெரும் தவம் செய்தனை? அதனை எனக்குச் சொல்வாய்'' (திருவேங்கடத் தந்தாதி, பாடல்-10) சங்கைப் பார்த்து,

'' ஏ வெண்சங்கே! என்ன பேற்றினைப் பெற்றுய்! எங்களால் கற்பனையாலும் நினைத்துப் பார்க்க இயலாத திருமால் இதழ்களை நாள்தோறும் சுவைக்கின்றுயே! அவன் இதழ்கள் கருப்பூரம் போல மணக்கின்றனவா? கமலப் பூப்போல நாறுகின்றனவா? அந்தத் திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்கின்றதா? மாதவன் வாய்ச்சுவையினையும், நறு மணத்தையும் அறிய பேரவா கொண்ட எனக்கு அவற்றினைத் தெரிவிப்பாயா?

ஏ சங்கே! நீ பெற்ற பேற்றினை எண்ணி நாங்களெல்லாம் பொறுமை கொள்கின்றேம்.

நீ நாள்தோறும் உறங்குவதோ அவன் செந்தாமரைத் திருக்கையில். பன்னுலும் உண்ணுவதோ மதுசூதனன் வாயமுதம். என்னே நீ பெற்ற பேறு!'' (ஆண்டாளின் நாச்சியார் திருமொழி) இவ்வாறெல்லாம் பலவாறு பாடித் துதித்துத் தானும் அப்பெறற்கரிய பேற்றினைப் பெற்று ஆண்டவனிடம் ஒன்றிவிட வேண்டும் என்று துடிக்கிறது பக்தனின் (பக்தையின்) பக்தி உள்ளம். பக்தி உள்ளத்தின் குமுறல்கள்தான் பக்திப் பாடல்களாக வெளிப்பட்டு ஜீவாத்மாவின் குரலாக ஒலிக்கின்றது. உருக்கமும் உணர்ச்சியும் கொண்ட அப்பாடல்கள் பக்தி உள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டுவனவாக உள்ளன.

★ ★ ★

12-ம் பக்கத் தொடர்ச்சி

மாமல்லபுரம், தமிழகத்தின் சிறந்த துறைமுகமாயிருந்தாலும், அங்கு ஆதி வராகப் பெருமாள் சந்நிதி மிகவும் பிரபலமானது.

'' பிணங்கள் இடு காடதனுள்
நடமாடு பிஞ்ஞகனோடு
இணங்கு திருச் சக்கரத்து எம்
பெருமானார்க்கு இடம்''

என்று திருமால் சிவனுடன் இணங்கி கோவில் கொண்டிருப்பதாகச்சொல்லு கிறார். பின்னாளிலேதான் இந்த இணக்கத்தை ''சேராச் சேர்த்தி'' என்று சைவ வைஷ்ணவர்கள் கருதத் தொடங்கி யிருக்கவேண்டும். மற்றும், ராஜ சிம்மன் காலத்திற்கு முன்பே திருமால் கோயில் மாமல்ல புரத்துக் கடற்கரையில் இருந்தது என்பதற்கு ஆதாரம் உண்டு. ராஜசிம்ம பல்லவனின் ஆஸ்தான மகாகவியான தண்டியாசிரியர் தாம் நேரில் தரிசித்தபோது, திருமாலின் திருவடிகளைக் கடல் அலைகள் மோதி அலம்பின என்று தமது ''அவந்தி சுந்தரி'' கதையின் தொடக்கத்திலே கூறியுள்ளார். இந்த நிலைமை திருமங்கை மன்னன் காலத்தில் மாறி விட்டது. ஏனெனில், பெருமாள் சந்நிதிக்கு முன்புறமாக சிவன் கோயிலைக் கட்டி வைத்ததுதான், அக்காலம் தொட்டே, கடல் அலைகள் திருமாலின் மூர்த்தத்தில் மோதுவதற்கு இடமில்லாமல் போய் விட்டது.

கச்சிமா நகரில் ஸ்ரீ வைகுண்டப் பெருமாள் சந்நிதி என்று பிரசித்த மாவுள்ள இதை இந்த ஆழ்வார் பாடாமலிருக்கவில்லை. அதை இவர் 'பரமேச்சுர விண்ணகரம்' என்று குறிப்பிடுகிறார். ஆனால், ஏனோ எல்லா ஆழ்வார்களும் கஞ்சி வரதராஜப் பெருமாளைப் பாடவில்லை. ஏனெனில் ஆழ்வார்கள் காலம் தொட்டே பிரசித்தி பெற்ற கோயில்களில் இதுவும் ஒன்றே. தமது பூலோக வைகுந்தமான திருவரங்கத்திலே தங்கித் தாம் உத்தேசித்த திருப்பணிகளை செய்து கொண்டு பக்தியை பெருக்கிக்கொண்டு வந்தார். இவர் பல திருப்பதிகளையும் பாடிப் பரப்பரப்பாய்த் திரிந்தார் என்பர் வைஷ்ணவ ஆசாரியர்கள். பாகவத தர்ம பூஷணமான திருமங்கை மன்னனின் காலம் தமிழர்கள் பெரு வாழ்வு வாழ்ந்த காலம். அதை ஒரு பெரிய பக்தியுகம் என்றே சொல்ல வேண்டும்.

அவருடைய நாயகி நாயக பாவத்தின் எல்லை எப்படி பிரதி பலிக்கிறது என்று பார்ப்போம்.

காரார் கடல்வண்ணன்
பின்போன நெஞ்சமும்
வாராதே என்னை
மறந்தது தான்.

என்பதில், தாயார் கவலையுற்றிருப்பது கண்டு, காதலி வேறு வழி இல்லாமல் தன் நெஞ்சையே தூது விடுகிறாள். பலன் என்ன! போன நெஞ்சு இவளையும் மறந்து, தூதையும் மறந்து தன்னையும் மறந்துவிட்டதாம். 'என் நெஞ்சே எனக்கு உதவாமல் இருக்க வேறு யார் உதவி செய்யப் போகிறார்கள்.' என்று கலங்கி, காதலுக்காக உயிரையும் தன் பெண்மையையுங் கூடத்தியாகம் செய்யச் சித்தமாயிருக்கிறாள். இவள் யார் என்றால், திருமங்கை நாயகிதான். உண்மையில், சீதைக்கு இராமனிடத்திலும், ராதாவுக்குக் கிருஷ்ணனிடத்திலும் எவ்வளவு காதல் உண்டோ, அவ்வளவு காதல் திருமங்கை யாழ்வாருக்கு பெருமாளிடத்தில் உண்டு. இறைவன் தன் அழகைக் காட்டிக் கொடுத்து இவர் உள்ளத்திலே காதல் விளைவித்து இவரைத் திருத்திப் பணிகொண்டான்.

பரகாலர் என்ற இந்த ஆழ்வார் பரகால நாயகியாகி அனுபவிக்கும் காதலை திருநெடுந்தாண்டகமாக பாசுரத்திலே சொரிந்து கொட்டுகிறார் இவர். ''பட்டு உடுக்கும், அயர்ந்து இரங்கும், பாவைப்பேணாள், பனி நெடுங்கண் நீர்ததும்பப் பள்ளி கொள்ளாள்; சொல்லெடுத்துத் தன் கிளியைச் சொல்லே என்று, துணை முலை மேல் துளி சோரச் சோர்கின்றாளே! நெஞ்சுருகிக் கண்பனிப்ப நிற்கும், சோரும், நெடிது உயிர்க்கும்; உண்டு அறியாள், உறக்கம் போனாள், மூவுலகும் கடந்து அப்பால் முதலாய் நின்ற ஆரமுதை அரங்கம் மேய அந்தணனை, திருத்தண்காவில், வெஃகாவில் திருமாலைப் பாடக் கேட்டு வளர்த்ததனால் பயன் பெற்றேன் என்று தான்வளர்த்த கிளியை வணங்கும் பரகால நாயகி அந்த கார் வண்ணத் திருமேனியை கண்டுகளிக்கும் வரை காத்திருந்தாள் என்று தாய் கூறுவதாகக் கூறி மகிழ்கின்றது இவர் திருவுள்ளம்.

ஒரு சமயம் ஆலி நாடர் வந்தார்! அருள் மாரி வந்தார்! மங்கை வேந்தர் வந்தார்! நம் கலியர் வந்தார்! நாலு கவிப்பெருமாள் வந்தார்! நீல நிறத்து நிமலர் வந்தார்! கொற்ற வேல் பரகாலர் வந்தார் என்ற விருதாவளிகளை முழங்கிக்கொண்டு சீர்காழியை நெருங்கினர். சம்பந்த மூர்த்திகளோ விளையாட்டாக, ஒரு குறளைப் பாடுங்கள் என்று கேட்க, ஒரு குறளாய் என்று தொடங்கி மகாவிஷ்ணுவின் வாமனாவதாரத்தை சிறப்பித்துப் பாடினாராம். பிறகு, படி உண்ட பெருமானைப் பறித்துப்பாடிப் பதம் பெற்ற பெருமானே என்று அன்பாகவும் மரியாதையாகவும் அழைத்து உபசரித்தாராம்.

'' அருள்குலவு மயிலைதனில்
அனலால் வெந்த
அங்கத்தைப் பூம்பாவை
ஆக்கினோம் என்று

இருக்கும் அதுதகவு அன்று
நிலவால் வெந்த
இவளையும் ஓர்பெண் ஆக்கல்
இயல்புதானே.''

—திருமங்கையாழ்வார்.

திருமாலை வழிப்பறி செய்து அவருடைய பரமபத ராஜ்ஜியத்தைப் பரித்துக் கொண்டவரே, உம்முடைய பவனிக்கு எதிரே போன, (தன்னைக் காதலியாக பாவித்து), என் பெண் கொடியையும் இப்படி வழிப்பறி செய்யலாமா. திரும்பி வரும்பொழுது உயிர் ஒன்று தானே கொண்டு வந்தாள், ஐயோ! அவள் இதயத்தையும் பறித்துக்கொண்டீரே! என்று அவர் வருகை தம்மை எப்படி உருக்கி விட்டது என்பதை, தாயார் கூறுகிற மாதிரி வெளியிட்டார். ஞான சம்பந்தரின் அற்புதங்களை நன்கு அறிந்த திருமங்கை மன்னன், மயிலாப்பூரில், பாம்பு கடித்து இறந்து, தகனம் செய்யப்பட்ட பூம்பாவையை பெண்ணுக்கி வைத்த பெருமானே. உம்மை நினைத்துக்கொண்டு வருந்தினவளோ உன் நினைவினுலேயே வெந்து போனுள். இவளையும் ஒரு பெண்ணுக்கி வைக்க வேண்டும் என்று தமது நட்புக் காதலை வெளியிடுகிருர் இவர்.

இறைவனுக்கு உரிய ஆத்மாவை எனது என்று அபிமானிப்பதைக் களவு என்று பக்தர்கள் கருதுகிருர்கள். பக்தர்களாவதற்கு முன்பு திருமங்கை மன்னன் நினைத்த மாதிரி அப்பரும், தொண்டரடிப் பொடியாழ்வாரும் கருதினுர்கள்.

திரு நரையூர் நம்பி முன் செய்த பிரார்த்தனை, "தீயில் பொலிகின்ற செஞ்சுடராழி திகழ்தரு சக்கரத்தின் கோயில், பொறியாலே ஒற்றுண்டு" என்று சொல்லும்படி வைஷ்ண முத்திரை தரித்து, திவ்வியமான திருமண் காப்பு அணிந்து, தாமரை மணி துளசி மணி தரித்து, வைஷ்ணவக் கோலத்துடன், ஊரும் நாடுமறிய குமுத வல்லியை மணந்ததின் பயன், இறைவனின் தீராத அருள் விளையாட்டிலே இருள் சூழ்ந்த வாழ்க்கையின் புதிருக்குப் பொருள் கிடைத்தது.

இதன் விளைவுதான், திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், சிறிய திருமடல், பெரிய திருமடல், திருவெழு கூற்றிருக்கை என்று எப்பொழுதும் மிளிர்கின்ற ஆறு அங்கங்கள்.

'' சதிரான வீரக்கழலும், தஞ்சமான
தாளிணையும்
குந்தியிட்ட கணைக்காலும், குளிர
வைத்த திருவடிமலரும்
வாய்த்த மணங்கொல்லியும், வயல்
ஆலி மணவாளன்
'வாடினேன் வாடி' வாழ்வித்தருளிய
நீலக்கலிகன்றி
மருவலர்தம் உடல்துணிய வாள்வீசும்
பரகாலன்
மங்கை மன்னனுன வடிவே!''

—மணவாளமாமுனிகள்.



# ஓர் அறிவிப்பு

கி. பி. 15-ஆம் நூற்றுண்டைச் சார்ந்தத் தெலுங்கு இசைக் கவிஞரும், அவ்வேழு மலைகளில் நின்றவண்ணம் கோலம் கொண்டிருக்கும் வேங்கடவனின் சிறந்த பக்தருமான ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யார் அவ்நெடியோன் மீது பக்திச் சுவையும் காதற்சுவையும் மிக்குஒளிர 32,000 கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். அன்னுரின் அச்சீர்மைமிகு கீர்த்தனைகளின் புகழ் எங்கும் பரவும் வகையில் அக்கவிஞரின் நினைவாக, திருப்பதியில் ரூ 4.5 இலட்சம் செலவில் 'ஸ்ரீ அன்மாச்சார்யா கலாமந்திரம்' ஒன்று கட்டப்பட்டுள்ளது. தற்போது அக்கலா மந்திரத்தில், சமயப்பற்றும் ஆன்மீகப்பற்றும் எங்கும் தழைத்தோங்கும் வகையில் நூலகம் ஒன்று திறக்கப்பட்டுள்ளது. இந்நூலகத்திற்கு இந்து சமயம், புராணம் மற்றும் இந்தியக் கலாசாரம் சம்பந்தப்பட்ட பத்திரிகைகள், நூல்கள் பக்தர்களிடமிருந்து இலவசமாக வரவேற்கப்படுகின்றன. மக்கள் சேவையே மகேசன் சேவையாகக் கொண்டு, இப்புனித சேவையில் பங்கேற்று அவ்வெல்லாம் வல்ல அலர்மேல் மங்கை உறைமார்பனின் அருளைப்பெறுவீர்களாகுக!

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# வினை தீர்க்கும் வேல் விழியாள்

"மாரி" என்ற சொல்லின் உண்மைப் பொருளை ஆராயுமிடத்து, 'மழை' என்று ஒரு பொருள் உண்டு என்பது தொற்றமிழின் விளக்கம். ஆயினும் ஈண்டு 'மாரி' என்ற சொல் மழையை மட்டும் குறிப்பிடத்தக்க தன்று. பின் என்னவென வினவுகிறீர்களா! அந்தப் பெயரின் பின் விளங்கா நிற்கும் ஒரு விளக்கமும் உண்டு. அஃதாதெனின் மழையைப் போல் கருணையைப் பொழியும் "தேவி ஸ்ரீ மாரியம்மன்" என்பதே!

ஆக 'மாரி' என்ற சொல்லுக்கு உண்மை விளக்கம் என்னவென்று பல்லோருக்குத் தெரியுமோ—என்னவோ? அதுபற்றி ஆராய நாம் புகவில்லை. ஆயினும் 'மாரி' என்னும் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே "மாரியம்மன்" என்ற பெண் தெய்வமொன்றின் உருவம் மட்டும் நினைவிற்கு வந்தால் வியப்பதற்கு ஏதுமில்லை.

சக்திகளுள் ஒன்றான 'மாரியம்மன்' மாவட்டங்களுக்கு ஏற்பவும், அவரவர்கள் குல வழக்கிற்கேற்பவும், பச்சை மாரியம்மன், பண்ணாரி மாரியம்மன் மரகத மாரியம்மன், தேவிமாரியம்மன் கருமாரியம்மன், கருமாறியம்மன் என்றெல்லாம் விரியும். அப்படிப்பட்ட மாரியம்மன் என்று சொல்லப்படும் ஸ்ரீ தேவி பராசக்தியின் உபாசகர்களுக்கு, அன்னை ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியின் பக்தர்களுக்கு ஒரு அருமையான வரப்பிரசாதமாய் இக்கலியுகத்தில் கிடைத்திருக்கும் கோயில்களில் ஒன்றுதான் இருக்கன்குடி ஸ்ரீ மாரியம்மன் கோயிலாகும்.

இஃது இராமநாதபுரம் மாவட்டத்திலிருக்கும் 'சாத்தூர்' என்னும் ஊருக்கு எட்டு கிலோமீட்டர் தொலைவில் அமர்ந்திருக்கிறது. இருக்கன்குடி ஒரு சிறிய கிராமமாகத் திகழ்ந்த போதிலும் அதில் எழுந்தருளியிருக்கும் 'தேவீ ஸ்ரீ மாரியம்மனு' க்குத் தான் எத்தனை சக்தி!

விழி இழந்தோர் பார்வை பெற்ற அதிசயம்; பேய், பிசாசுகள் பிடித்திருந்தோர் குணமான அற்புதம்; தீராத ஏவல், பில்லி, சூன்யம், மாந்திரீகம் ஆகியவற்றால் நாசமடைந்த குடும்பங்கள் மீண்டும் புனர் வாழ்வு பெற்ற ஆச்சர்யம்: வஞ்சனைத் தீர்ப்பினால் வாழ்விழந்த மனிதர்கள் தஞ்சம்புகுந்த பொழுது நஞ்சனைய தீர்ப்புகளுக்கு முடிவு கட்டி நியாயத்தை நிலைநிறுத்திய அற்புதம்; கிராமத்துக் கர்ண பரம்பரைத் தேவியாக இல்லாமல் ஆதி பராசக்தியாகவே ஒளிரும் அதிசயம்!—இப்படி அதிசயங்களின் எண்ணிக்கை பலகோடி!

பார்ப்பதற்குத்தான் அது கிராமம்! இருந்தாலும் கோயிலோ விரிவான முறையில் பரந்து கிடக்கிறது. இரு ஆறுகளின் நடுவே பிரம்மாண்டமான முறையில் எழுந்தருளியிருக்கும் அந்தக் கோயிலின் மூர்த்தியானவள் 'சுயம்பு தேவி' யாவாள். அவள் எப்படிக் கிடைத்தாள்? என்பதற்கான உண்மையான வரலாறு நமக்குத் தெரியாவிட்டாலும், அவ்வூரில் பேசப்படும் கர்ண பரம்பரைக் கதையொன்று அதற்கு விளக்கம் தருகிறது.

முன்னொரு சமயம் முகவை மாவட்டம் செழித்திருந்த நேரம் பயிர் பச்சைகள் மிகுந்து இருந்ததால் கால்நடைகளின் எண்ணிக்கை அதிகம். நிலவளத்தோடு, நீர்வளம்தான் அங்கு மிகுதி. எனவே அவ்வூர் 'இடையர்' கள் கால்நடைகளைச் செழிப்பான இடங்களில் மேயவிடுவது வழக்கம். அவை மேய்ந்து மாலையில் வீடு திரும்பும் பொழுது, வழக்கமாக வந்து அவற்றின் சாணங்களை எடுத்துப் போவது அவ்வூரிலுள்ள சில பெண்களின் பழக்கம். எப்போதும் போல அன்றும் கால்நடைகள் மேய்ந்த பிறகு அவற்றின் சாணங்களைக் கூடைகளில் போட்டு எடுத்துக் கொண்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தனர் சில பெண்கள். ஒரு குறிப்பிட்ட இடத்தில் திடீரென ஒரு பெண்ணுக்கு அதிகக் களைப்பு மேலிட்டது. அந்தக் களைப்புடன் அவள் நடக்க முடியாதபடி ஏதோ ஒன்று தடை செய்தது. எனவே, அவள் தான் சுமந்து கொண்டிருந்த கூடையைக் கீழே இறக்கி வைத்து விட்டுச் சிரமப்பரிகாரம் செய்து கொண்டாள்.

சற்று நேரம் கழித்து வீடு திரும்பும் எண்ணத்துடன் இறக்கி வைத்தகூடையை எடுத்தாள். ஏனோ தெரியவில்லை அந்தக் கூடை இருந்த இடத்தை விட்டு நகர மறுத்தது. கூடையை அவளால் தூக்க இயலவில்லை. ஒரு சிறு துளி கூட அசைக்க முடியாமல் பாறாங் கல்லாய்க் கனத்தது அது!

---

திரு. ஸி. ஜே. அசோக்குமார்
மாயவரம்.

---

இதனால் பயமடைந்த அவள், தன் முன்னே போகும் மற்ற பெண்களை உதவிக்கு அழைத்தாள். அவர்களும் வந்து முயற்சித்துப் பார்க்க ஒரு கனமான இரும்பு போல் நிலைபெயராது நின்றது அது! அவர்களும் என்னவோ ஏதோ என்று பயந்து ஊர்ப் பெரியவர்களிடம் ஓடிச்சென்று முறையிட்டனர். அந்தப் பெரியவர்களால் நம்ப இயலவில்லை-அந்த நிகழ்ச்சியை. அவர்களும் வந்து பார்த்து முயற்சி செய்து தோற்ற பின்னர், விடிந்து இது குறித்து என்ன செய்ய வேண்டுமோ, அதைச் செய்யாலாம் என முடிவு செய்தனர்.

அன்றிரவு........!

வயது முதிர்ந்த, பக்தி நிரம்பிய ஒரு பெண்ணின் கனவில் 'அன்னை ஸ்ரீ மாரியம்மன்' தோன்றினாள்! கூடை நிலைபெயராமல் நின்ற அந்த இடத்திற்கு அடியில்தான், தான் குடிகொண்டிருப்பதாகவும், அந்த இடத்தைக் கிராம மக்களுக்கு அடையாளம்காட்டு

வதற்காகவே கூடையை எடுக்கவிய லாவண்ணம் ஆக்கப்பட்டதென்றும், விடிந்த உடன் அந்த இடத்திற்கு ஊர்ப் பெரியவர்களுடன் சென்று கூடையை அகற்றலாமென்றும், அந்த அகற்றப்பட்ட பூமியை அகழ்ந்து பார்த்தால் அதில் தான் கிடைப் பேன் என்றும், அப்படி வெளியே எடுக்கப்பட்டவுடன் அவ்வூர் மக்கள் கோயில் கட்டி வழிபட்டால், அவர் களின் விருப்பங்கள் நிறைவேறுமென் றும் அருள் பாலித்தாள்!

திடுக்கிட்டுக் கண்விழித்தாள் அந்த மூதாட்டி. அந்தக் கனவு ஊராரிடம் பரிமாறப் பட்டது. அதன் விளைவே தற்போது எழுந்தருளியுள்ள பிரம் மாண்டமான அந்தக் கோயில்! அந்தக் கோயில் உருவாகும் பொழுது, அத னைச் சுற்றியிருந்த ஊரின் பெயர் தெரி யவில்லை, எனினும் தற்போது அது 'இருக்கன்குடி' என்று அழைக்கப்படு கிறது.

'இருக்கன்குடி' என்ற பெயர் எப் படி வந்தது என்பதற்கும் ஒரு விளக் கம் தரப்படுகிறது. ஆரம்பத்தில் இரண்டு நதிகளுக்கு மத்தியில் அன்னை யின் ஆலயம் எழும்பி நின்றது. அந்த நதிகளை, நதிகள் என்று கூறுவது, ஸ்ரீ அம்மனுக்குத்தரப்படும் மரியாதை யைக் கெடுத்து விடும் என்பதால் அவற்றை 'கங்கை' கள் என அழைத் தனர் அன்றிருந்த பெரியோர்! அந்த இரு கங்கைகளும் கூடிய இடத்தில் மையமாக ஸ்ரீ அம்மன் எழுந்தருளி யிருந்ததால் 'இரு கங்கை கூடி' என அவ்வூரை அழைத்தனர். காலப் போக்கில் 'இரு கங்கை கூடி' என்ற பெயர் மெல்ல மெல்லத் தேய்ந்து 'இருக்கன் குடி' என மருவிற்று.

கோயிலின் முன் அமைப்புகள் கண் ணைக் கவரும் விதத்தில் அமைக்கப்பட் டுள்ளன. ஆலயத்தின் பிரதான வாயி லின் இரு பக்கங்களிலும் பெரிய அள வில் தீட்டப்பட்டுள்ள நுழைவாயில் ஓவியங்கள் கண்களைக் கவருகின்றன. ஒரு புறம் 'மூஷிக' வாகனத்தில் எழுந் தருளிய விக்னேசுவரரும், மறுபுறம் மயிலின் மேல் எழுந்தருளியிருக்கும் வேல் முருகரும் கண்களைக் கொள்ளை கொள்கின்றனர்.

''நுழைவாயிலைத் தாண்டியவுடன் மிகப்பெரிய 'த்வஜ' ஸ்தம்பம் பார்ப் பவரைப் பிரமிக்க வைக்கிறது. 'த்வஜ ஸ்தம்பத்தின் நேர் மேல்புறத்தின் அருகே சிறிது இடைவெளிவிட்டு 'நந் தீஸ்வரர்' அமர்ந்துள்ளார். அவருக்கு நேரே பத்தடி இடைவெளியில் அம்ம னின் கருவறைக்கெதிரில் ஒரு 'பலி பீடம்' அமைந்துள்ளது. அப்தப் பலி பீடம்' பலிபீடமாக இல்லாமல் நீள மான ஒரு கல்லாகப் போடப்பட்டுள் ளது.

மிக முக்கியமான தினங்களில் கரு வறைக்குள் போகவியலா வண்ணமும், நெரிசலைத் தவிர்க்கும் வண்ணமும் அந்தக் கல்லிலேயே தேங்காய்களை உடைத்து அர்ச்சனை செய்யப்படுகின் றன. சன்னதியின் மேல் முகட்டில் வழக்கம் போல் 'கெஜலெட்சுமி' யின் உருவம் பொறிக்கப்பட்டு மனதை அள்ளுகிறது. மூல ஸ்தானம் மிகவும் குறுகியது. உள்ளே நுழைந்தவுடன் இடது கைப் பக்க மூலையில் விநாயகர் அமர்ந்துள்ளார்.

பிரதான கருவறையை அலங்கரிக் கிறாள் **அன்னை ஸ்ரீ மகா மாரியம்மன்.** நான்கு கைகளுடன் வினை தீர்க்கும் வேல் விழிகளைப் பக்தர்கள்மேல் வீசி கருணையே வடிவாய் அமர்ந்திருக்கிறாள் 'ஜெகத் சம்பூரணி.' வலது காலை மடித்து, இடது காலைப் பூமியில் பதித்து, மனதை விட்டு நீங்காக் கோலத்தில் அமர்ந்து வேண்டு வோருக்கு வேண்டுவன தருகிறாள் உலக நாயகி!

அன்னை ஸ்ரீ மாரியம்மனின் அருள் தரிசனம் காண்போரைப் பக்திப் பர வசத்தில் ஆழ்த்தும். தன்னுடைய நான்கு கரங்களிலும் ஸூலம், ஸர்ப் பாபர்ணமணிந்தடமருஹம், பாஸம், மதுக்கிண்ணம் முதலியவற்றை ஏந்தி யிருக்கிறாள்.

மென்மையான பாதங்களில் கொஞ்சுகின்ற கால் சிலம்புகள்; அவற் றின் விரல்களிலே வெண்மையான 'மிஞ்சி'கள்; கழுத்திலும், தோளிலும், மார்பிலும் தொங்குகின்ற விலை யுயர்ந்த ஆபரணங்கள்; அவற்றிற்கு நடுவிலே ஒளிரும் திருமாங்கல்யம்; பரமசிவத்தின் கையில் தாங்கிய உடுக் கையோ எனச் சந்தேகிக்கும் வகை யில் இருக்கும் இடை; அந்த இடையை அலங்கரிக்கும் ஒளிவீசும் ஒட்டியாணம்; முகத்தில் பொங்கும் அந்தத் தெய் வீகக் காந்தியை மூழ்கடிக்கும் விதத் தில் வெள்ளை வெளேரெனப் பளிச் சிடும் திருநீற்றுப் பட்டை; அதன் நடுவே செம்பஞ்சுக் குழம்பை நிகர்த்த குங்குமப் பொட்டு.

அன்னையின் மகுடத்திற்குப் பின் எரி யும் அக்னி—ஆதிசேஷனைப் போன்று ஆலகால விஷத்தைக் கக்கக்கூடிய வகையில் சுடர் விட்டுப் பிரகாசிக் கிறது. அந்த அக்னி, தூரத்திலிருந்து வரும் பகைவர்களை, பேய், பிசாசு, பில்லிசூன்யங்களை எரித்து விடுவேன் என்பதைச் சொல்லாமல் சொல்லி நிற்கும் ஆயுதமோ?

அந்த விழிகள் வந்த வினையும், வரு கின்ற வெவ்வினையும் தீர்க்கும் வேலா யுதமோ? அக்னி ஜ்வாலையை உள் ளடக்கிக் கொண்டு நிற்கும் கதிரவன், கடல் நீரைத்தன் ஒளிக் கிரணங்களால்

## அறிவிப்பு

**ஸப்தகிரியில் வெளியிடப்படும் கட்டுரைகள் புகைப்படங் கள் ஆகியவற்றிற்கு எந்தவிதமான சன்மானமும் வழங்கப் படமாட்டாது.**

**—தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.**

முகர்ந்து நன்னீராக மக்கள் முன் பொழிவது போல, அறியாமை, ஞான சூன்யம், நேர்மை அல்லாதவை ஆகிய வற்றை அம்மனின் மகுடத்திற்குப் பின்சுடர்விடும் அக்னியாகிய சூரியனும் எரித்து, அருள், பக்தி தாகம், ஞானம், வைராக்கியம் ஆகிய நல்லருளை நன் னீராகப் பொழிவிக்கிறது. அந்த நன் னீரே அம்மனின் வினை தீர்க்கும் வேல் விழிகள்!

வேண்டுவோருக்கு வேண்டுவன தரும் இத்தேவியின் அருள் விழிகள் பட்ட மாத்திரத்திலேயே, செய்வினை கள் பில்லி, சூன்யம், ஏவல், வைப்பு, பிசாசு பீடைகள் எல்லாம் அகன்று விடுகின்றன.

அம்மனை விமானப் பிரதட்சணம் செய்யத்தக்க அளவில் விரிந்து கிடக் கிறது ஆலயம். கிராமத்துக் கர்ண பரம்பரை தேவதைகளான பேச்சி யம்மன், பிடாரியம்மன், வெயிலு கந்தம்மன், காத்தவராயன் ஆகியவை காவல் தெய்வங்களாய் நிமிர்ந்து நிற் கின்றன.

இவ்வாறு சுற்றிலும் காவல் தெய் வங்களால் சூழப்பெற்ற இந்த அம் மனுக்குச் செய்யும் காணிக்கைகளில் மிக முக்கியமானது 'திருவேங்கடவன்' ஆலயத்தில் செய்யப்படுவது போன்ற முடி காணிக்கை! இதற்கென்று தனிக் கொட்டடிகள் உண்டு.

அதைத் தவிர தாங்கள் வேண்டிக் கொண்டபடி வெள்ளியினால் செய்யப் பட்ட மனிதப் பிரதிமைகள், கைகால் முதலான அங்கங்கள்—இவைகளும் பிரார்த்தனையாகச் செலுத்தப்படுகின் றன. தங்களின் பூமியின் விளைச்சலுக் காக வேண்டிக் கொண்டுள்ள உழவர் பெருமக்கள் செய்யும் பிரார்த்தனை களான தானியங்களைத் தனித் தனியே ஏற்றிக்கொள்ள கிடங்குகள்.

அம்மனுக்குச் செய்யப்படும் நித்திய அபிஷேகங்களில் மூல இடத்தை வகிக் கிறது பன்னீர் அபிஷேகம். பேய், பிசாசு, பீடைகள் நீங்க வேண்டுமென நினைப்போர் இந்தக் கோயிலில் ஓரிரு இரவுகள் தங்கினாலே போதுமானது என்பது ஐதீகம்.

அம்மனின் அருள் கடாட்சத்தினால் எந்த வினைகளும் பறந்துவிடும்பொழுது இவை அகல்வது ஆச்சர்ய மொன்று மில்லை. இந்தக் கோயிலில் ஒவ்வொரு செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் விசேஷமாக கொண்டாடப்பட்டா லும், முக்கியமான விசேஷங்கள் நடை பெறுவது ஆடி மாதமும், மாசி மாத மும் தான்.

இந்த நாட்களில் நடை அதிகாலை யிலே திறக்கப்பட்டு இரவுவரை மூடப் படாமலிருக்கிறது. மற்ற நாட்களில் மதியம் 12 மணிக்குப் பூட்டி, 4 மணிக்குமேல் திறந்து மீண்டும் இரவு 8 மணிக்கு பூட்டப்படுகிறது.

ஒவ்வொரு தேவி உபாசகனும் சென்று காண வேண்டிய மகத்தான கோயில் இது. வேண்டுவோருக்கு வேண்டுவன தரும் ஸ்ரீ அம்மனின் பாத கமலங்களே சரணம்!



---

(8 ஆம் பக்கத் தொடர்ச்சி)

விஷ்ணுவானவர், ஜ்வராசுரனை வதைத்தார் என்று காளிகா புராணம் கூறும் கதை பற்றி உடன்பாடில்லை என்றும், அவை தம்முள் மாறு கொண்டு மலைகின்றன என்றும் அறிஞர் கருதுகின்றனர்.

எப்படியேயாயினும் விஷ்ணு பக வான் புரவி முகத்தோடு பத்ராஸ்வத் திலும், வராகமாக கேது மாநிலத் திலும், கூர்மமாகப் பாரதத்திலும், மச்சமாகக் குருவிலும், விஸ்வரூபனை எல்லா இடங்களிலும், தம்மை வெளிப் படுத்துகின்றார் என்பது விஷ்ணு புராணத்தின் (9.2) கருத்தாகும். புரவி முகத்தோடு, ஜனார்த்தனன் என் னும் பேர்பூண்டு குதிரையின் முன்னங் கால் போன்ற நான்கு கைகளோடும், மூன்று கண்களோடும் காட்சி தரு கின்றார் என்றும் அது (54.2) கூறும்.

வாமன புராணத்தாலே ஹயக்கிரீவ ராக மஹோதயாவில் தங்கியுள்ளார் என்றும், பிற்கால நூலான கந்த புராணத்தாலே (தர்மாரண்ய காண் டம்: 14.15) கண்ணனின் தலை எப்படி அவனுடைய சொந்த வில்லின் நாணாலே அவன் கழுத்திலிருந்து அறுப் புண்டது என்பதையும், சூரியனின் தேர்க்குதிரைகளுள் ஒன்றின் தலையை எடுத்து விசுவகர்மாவினால் அதற்குப் பதிலாக எப்படிப் பொருத்தப்பட வேண்டியதாயிற்று என்பதையும், அதன்பின் பகவான் எப்படித் தர்மா ரண்யத்தில் தவங்கள் மேற்கொண்டார் என்பதையும் நாம் அறிகின்றோம்.

சாத்வத தந்திர நூலும் (201), தேவீ பாகவதமும் (1.5) சில புதிய செய்திகளை நமக்கு வழங்குகின்றன.

இத்தகைய பகவானை ஹயக்கிரீவ கவசம் (R. 5069) என்னும் பிற்கால நூல் இவ்விதம் போற்றுகின்றது.

**ஓம் ஹயக்கிரீவாய சுக்லவர்ணாய**
**ஞான மூர்த்தயே ஓங்காராய**
**அச்யுதாய பிரஹ்ம வித்யா**
**ப்ரதாய காய சுவாஹா!**

என்று இப்படிக் கலைமகளின் அறிவும் ஞானமுமான மேம்பாட்டை வைண வத் தத்துவத்திலே பரிமுகனுக்கே உரிமையாக்குகின்றது இந்த நூல்.

இவ்வாறே, இம்மூர்த்தியை 'மூன்று வேதங்களின் வடிவாய் அமைந்தோன்' என்று ஹயக்கிரீவோபநிஷத் (4) எனும் நூல் பரவும்.

இவ்வழிபாட்டில் புகழ்மேவி நின்ற வரும் வைணவச் சமயத்தின் எஃகுத் தூண்களிலே ஒருவரும், மாபெரும் தத்துவ ஞானியும், வாத வல்லமை யிலே தமக்கு யாரும் நிகரின்றித் திரிந்த வாதகேசரியுமான வேதாந்த தேசிகரின் ஹயக்கிரீவ ஸ்தோத்திரம் இப்படித் தொடங்குகின்றது:

''ஞானனந்தமயம் தேவம்
நிர்மல ஸ்படிகாக்ரிதிம்
ஆதாரம் சர்வ வித்யாணும்
ஹயக்கிரீவம் உபாஸ்மஹே!''

இப்பகவான் தமிழ் நாட்டிலே கடலூரை அடுத்த திருவயீந்திர புரத்தே குன்றின்மேல் திருக்கோயில் கொண்டுள்ளான். இத்தேவனைத் திருநாலாயிரம் இப்படிப் பரவுகின்றது.

'' வசையில் நான்மறை கெடுத்த அம்
மலையர்க்கருளி, முன் பரிமுகமாய்
இசைகொள் வேத நூ லென்றிவை
பயந்தவனே !'' *(1369)*

'' பன்னுகலை நா ல்வேதப்
பொருளை யெல்லாம்
பரிமுகமாய் அருளிய எம்
பரமன்'' *(1619)*

இப்படி ஞான சக்தி வடிவினராக இந்தியர் கொண்டாடும் இந்துமதக் கடவுளான ஹயக்கிரீவரைப் பயங்கர வடிவினராகப் படைத்துக் கொண்ட வரலாறும் உண்டு, சுமார் கி.பி. 500 அளவில் விஷ்ணு ஹயக்கிரீவரை வித்யா ராஜா ஹயக்கிரீவராக—புத்த அவலோகி தேசுரரின் ஒரு கூறுக ஆக்கிக் கொண்ட மஹாயான பௌத்தர்கள், அவரைப் பௌத்தக் கடவுளர் பரிவாரத்திலே மிகப் பயங்கரமான தோற்றம் உடையவராகவும், பெருமளவில் வழிபடப்படுகிறவராகவும், ஆபிசாரம் போன்ற நாச சக்தி வேலைகளுக்கே உகந்தவராகவும், படைத்துக் காட்டியிருக்கின்ருர்கள். (Journal of the Indian Society of Oriental Art. Vol. 14. P. 58). இந்தப் பயங்கரத் தேவனின் இந்தப் பயங்கரத் தோற்றமும் அமைப்பும், ஹயக்கிரீவாஸ்திரம், ஹயக்கிரீவ மஹாமாலா மந்த்ரம் முதலான சில சுவடிகளிலே காணப்படுகின்றன என்று அறிஞர் T.V. மஹாலிங்கம் கூறுகின்ருர். (The Adyar Library Bulletin Vol. XXIX-Pts. 1-4: 1965).

ஞானத்திற்கும் வலிமைக்கும் நிலைக்களன் என்று அறிஞர் போற்றும் அவதாரமான சங்கர்ஷணரின் ஒரு கூறே இந்த ஹயக்கிரீவர் என்று விஷ்ணு தர்மோத்திரம் சுட்டுகின்றது. அறிஞர் நியோக் கருதுமாப்போலே, வைணவ மதம், தான் அடைந்த படிநிலை வளர்ச்சியிலே இந்த ஹயக்கிரீவ அவதாரத்தை, முன்பிருந்த ஞானத்தின் வலிமையின் கொள்கலனை சங்கர்ஷணரின் ஒரு கூறு எனலும் பொருத்தமுடைத்தே,

இதற்கு ஏற்ருற்போல், ஹயக்கிரீவரின் உருவம் ஒன்று வேறு எங்குமே காணக்கிடைக்காத வகையில் கிடைத்திருக்கிறது. ஏறத்தாழ ஒன்பது அல்லது பத்தாம் நூற்ருண்டின என்று மதிப்பிடப்படுவனவும், ராஜஸ்தானில் அத்ரு அனும் இடத்தில் கிடைத்தவையும் இன்று கோட்டா பழம் பொருள் நிலையத்தில் உள்ளவையும் ஆன மூன்று சிலைகளிலே ஒன்று விசித்திரமான வகையில், தன் ஒரு கையிலே ஒரு பாம்பைப்பற்றிய படிக் காட்சி தருகிறது. ஹயக்கிரீவரின் ஒரு காலானது சேஷ நாகத்தின் மேல் ஊன்றியபடி இருக்க வேண்டும் என்று அக்கினி புராணம் கூறினும் சிற்பவடிவச்சாத்திரங்களிலே எங்குமே எதிலுமே, கையிலே பாம்பை ஏந்தியிருக்கவேண்டும் என்று சொல்லியிருக்கவில்லை என்பதாலே, கையிலே பாம்பை ஏந்தியிருக்கும் இது, ஞான சக்தி, பல சக்தி இரண்டின் வடிவான அனந்தனுகிய சேஷ நாகத்தின் நேர் அவதாரமான சங்கர்ஷணரின்அவதாரத்தோடு, அதே ஞான, பலக் கூட்டுறவின் அவதாரமான ஹயக்கிரீவருக்குத் தொடர்பு உண்டு என்றே கருத வேண்டியுள்ளது. அறிஞர். T.V. மஹாலிங்கமும் இதுவே கருதுகின்ருர். இத்தகைய அற்புத மூர்த்தியைப் போற்றி வணங்குவோமாக.

மணிமௌலி அணிந்த பிரான் மாயப்
பிரான்
மறைவிரிக்கும் பரிமுகத்தான் ஆழிப்
பிரான்
பிணி பிறவி அறுக்கும் பிரான் எம்
பிரான்
பேசுதிரு மகளோடும் ஆளும்
பிரான்!'' ★

## சந்தாதாரர்களுக்கு...

**31-3-78 ஆம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன; ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும்.** T

*58, 72, 151, 152, 186, 361, 373, 375, 473, 480, 508, 633, 700, 738, 740, 746, 774, 798, 907, 1074, 1100, 1105, 1112, 1116, 1124, 1125, 1132, 1134, 1136, 1137, 1138, 1142, 1145, 1335, 1750, 1753, 1754, 1755, 1756, 1757, 1758, 1759, 1760, 1761, 1762, 1763, 1764, 1766, 1767, 1768, 1769, 1770, 1771, 1772, 1773, 1774, 1775, 1776, 1777, 1778, 1779, 1780, 1781, 1782, 1784, 1785, 1786, 1787, 1788, 1789, 1790, 1791, 1792, 1793, 1794, 1795, 1796, 1797, 1798, 1799, 1800, 1801, 1802, 1804, 1805, 1806, 1807, 1808, 1809, 1810, 1811, 1812, 1813, 1814, 1815, 1816, 1817, 1818, 1819, 1838, 1867.*

# செய்திச் சுருக்கம்

## வெள்ளி விழா

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ் தானத்தாரின் கல்வி நிலையங்களில் ஒன்றான ஸ்ரீ பத்மாவதி மகளிர் கல்லூரியின் வெள்ளி விழா, அக்கல்லூரி அரங்கில் 18-1-78 அன்றும், அக்கல்லூரியின் மகளிர் விடுதியின் வெள்ளி விழா 19-1-78 அன்றும் வெகுச் சிறப்பாக நடைபெற்றன.

18-1-78 அன்று காலை 11 மணி அளவில் கல்லூரியின் வெள்ளி விழா இறைவணக்கப் பாடலுடன் களை கட்டியது. பின்னர் தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. எஸ். ராஜகோபால ராஜு அவர்கள் விழாவிற்கு வருகை புரிந்தோரை வரவேற்றுப் பேசுகையில் ராயலசீமையில் தன்னிகரற்று விளங்கும் கல்லூரியின் சிறப்பினை பலவாறு விளக்கினார். மேலும் அவர் தம் உரையில், தேவஸ்தானம் ஒவ்வொரு ஆண்டும் கல்வி மேம்பாட்டிற்காக சுமார் ஒரு கோடி ரூபாய் செலவழித்து வருகின்றது என்பதை குறிப்பிட்டு, கல்வி வளர்ச்சிக்காக மேலும் செலவிடுவதில் தேவஸ்தானம் ஒருபோதும் தயங்கியதில்லை என்பதையும் கூறினார். பிறகு கல்லூரியின் முதல்வர் திருமதி. கமலா மேனன் அவர்கள், கல்லூரியின் வெள்ளி விழாவைப்பற்றிய அறிக்கை ஒன்றினை வாசித்தார். அடுத்துப் பேசிய தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுத்தலைவர் திரு. சி. அண்ணாராவ் அவர்கள் தம்முரையில், தான் செயலாட்சித் தலைவராக இருந்த போது ஆரம்பிக்கப்பட்ட ஸ்ரீ பத்மாவதி மகளிர் கல்லூரியின் ஆரம்ப வரலாற்றினை நினைவுகூர்ந்து, கல்லூரி மேலும் மேன்மையடைய தன் வாழ்த்துக்களைத் தெரிவித்ததைத் தொடர்ந்து, இந்திய ஜனாதிபதியும், துணை ஜனாதிபதியும் அனுப்பிய வாழ்த்துரைகள் வாசிக்கப்பட்டன. விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் பேராசிரியர் கே. சச்சிதானந்தமூர்த்தி அவர்கள் தம்முரையில், ஆந்திர மாநிலத்தில், தனியிடம் பெற்று நிகரற்று விளங்கும் ஸ்ரீ பத்மாவதி மகளிர் கல்லூரியின் இன்றியமையாததைக் குறிப்பிட்டு, அக் கல்லூரியின் வளர்ச்சித் திட்டங்களுக்கு, துணைவேந்தர் என்ற அளவில் தாம் தன்னால் இயன்ற உதவி செய்ய ஆயத்தமாக இருப்பதாகக் கூறினார். மேலும் தம்முரையில், கல்லூரிக்கு தடையின்றி பொருளுதவி ஈந்துவரும் தேவஸ்தானத்தைப் பாராட்டிப் பேசினார். விழாவில் பங்கெடுத்துக் கொண்டு உரையாற்றிய ஆந்திர மாநில கல்வி அமைச்சர் திரு. எம். வி. கிருஷ்ணாராவ் அவர்கள், பன்னெடுங் காலமாக கல்வி நிலையங்களுக்கும், கோயில்களுக்கும் இருந்து வரும் தொடர்பினை விளக்கிக் கூறி, அவ்வழியில் தேவஸ்தானம், கல்வி நிலையங்களுக்கு ஆற்றிவரும் உதவிகளைக் குறிப்பிட்டார். இக் கல்லூரியின் வளர்ச்சிக்கு அரசு தன் பங்கை செவ்வனே ஆற்றும் என்று அரசு சார்பில் உறுதி அளித்தார். இக்கல்லூரியின் வெள்ளி விழா நன்கொடையாக அரசு ரூ. 25,000 வழங்குவதாக பலத்த கைத்தட்டல்களுக்கிடையே அமைச்சர் தெரிவித்தார். மேலும், இரண்டு அல்லது மூன்று இலட்சம் ரூபாய் செலவில் கலையரங்கு ஒன்றும் வெகு விரைவில் இக்கலூரியில் கட்டப்படும் என்றும் கூறினார். தொடர்ந்து பேசுகையில் திருப்பதியில் வடமொழிக்கென ஒரு தனிப் பல்கலைக்கழகம் அவசியம் என்ற கருத்துத் தெரிவித்தார். பின்னர் துணைவேந்தர் அவர்கள் வெள்ளி விழா மலரை வெளியிட்டு, முதற் பிரதியினை, ஆந்திர மாநில ஆளுநர் திருமதி. சாரதா முகர்ஜிக்கு வழங்கினார்.

விழாவைத் தொடக்கி வைத்துப் பேசிய, ஆந்திரமாநில ஆளுநர்திருமதி. சாரதா முகர்ஜி அவர்கள், தம்முரையில், தங்கு வசதிகளுடன் செயலாற்றும் கல்லூரிகளின் அவசியத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது, இதனால் மாணவ சமுதாயத்தினரிடையே ஏற்றத் தாழ்வுகள் நீங்கப்பெறுகிறது என்றும், ஓர் கூட்டு முயற்சியுடன் செயற்படுவதால் பல பயன்கள் விளைகின்றன என்றும் கூறினார். மாணவிகளுக்கு அறிவுரை கூறும் வகையில், கல்லூரியில் இருக்கும்போது மாணவிகள் அரசியலைப்பற்றி தெரிந்து கொள்ளலாமே தவிர, அதில் தீவிரமாக பங்கேற்றல் கூடாது என்று கூறினார். தொடர்ந்து பேசுகையில் ஆளுநர் அவர்கள், அவ்வப் பல்கலைக்கழகங்களில் பல துறைகளில் தேர்ந்தெடுக்கப்படும் மாணவ மாணவிகளை ஒரு வட்டத்திற்குள்ளேயே கட்டுப்படுத்தாமல், அவர்களை உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் உள்ள வேற்று பல்கலைக் கழகங்களுக்கு அனுப்பி, அவர்களுடைய உலக அறிவை வளர்க்கும் விதத்தில் தகுந்த முயற்சிகள் சம்பந்தப்பட்ட பல்கலைக்கழகங்களும், கல்வி நிறுவனங்களும் மேற்கொள்ள வேண்டும் என்றும், அதுபோதுதான் நாமும் உலகக் கல்வி தரத்திற்கு இணையாக செயலாற்றமுடியும் என்றும் கூறினார்.

பின்னர் கல்லூரியின் வளர்ச்சிக்குப் பல வகைகளில் துணைப் புரிந்திட்ட பல துறைகளைச் சார்ந்த ஆசிரியைகளுக்கு, ஆளுநர் நினைவுச் கேடயங்கள் வழங்கினார். அடுத்து, இக் கல்லூரியின் முதல்வராக 21 ஆண்டுகள் பணிபுரிந்து ஓய்வுபெற்ற திருமதி. டாக்டர் ராஜேஸ்வரிமூர்த்தி அவர்கள் இவ்விழாவில் பங்கெடுத்துக் கொண்டு உரையாற்றுகையில், சில குடும்பக்காரணங்களால் தங்கள் படிப்பினை இடையில் நிறுத்திக் கொண்ட பல பெண்கள் மீண்டும் தங்கள் கல்வியினைத் தொடர்ந்து பெற்றிடும் வகையில், இக் கல்லூரி வழி வகைகளை மேற்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

பின்னர், இவ்வெள்ளி விழா ஒட்டி நடைபெற்ற பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவிகளுக்கு, திரு. சி. அண்ணாராவ் அவர்கள் பரிசுகள் வழங்கினார். இறுதியில், கல்லூரியின் மாணவி தலைவியான குமாரி. நீலம் ஃபிரோஷ் நன்றி நவின்றார்.

அன்று மாலை 6 மணி அளவில் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

அடுத்த நாள், 19-1-78 அன்று, கல்லூரியின் மாணவியர் விடுதியின் வெள்ளி விழா காலை 10 மணி அளவில் தொடங்கியது. விடுதி வார்டன் திருமதி. மரியா தெரிஸிஸ்தா அவர்கள் கூட்டத்தை வரவேற்றதைத் தொடர்ந்து, விடுதி உதவி—வார்டன் திருமதி. டி. எம். பிரேமாவதி, விடுதியின் வெள்ளி விழா அறிக்கையை வாசித்தார். விழாவின் சிறப்பு விருந்தினரான ஆந்திர மாநில தலைமை நீதி

பதி திரு. எஸ். ஓபுல் ரெட்டி அவர்கள் தம்முரையில் ஒரு கல்வி நிறுவனத்தில் விடுதியின் அவசியத்தைப்பற்றி பேசிய போது அது எவ்வாறு ஜாதிமத பேதங்களை அகற்ற ஒரு நிலையமாக விளங்குகிறது என்பதை விளக்கிப் பேசினுர். விழாவிற்குத் தலைமைவகித்து உரையாற்றிய ஆந்திரமாநில அறநிலைய ஆணையர் திரு கே. புருஷோத்தமநாயுடு அவர்கள், மாணவர்களின் தேவைக்காக தேவஸ்தானம் செய்துவரும் பல்வேறு உதவிகளைக் குறிப்பிட்டுப் பேசினுர். இவ்விழாவில் தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. எஸ். ராஜகோபால ராஜு அவர்களும் பங்கேற்ருர். பின்னர் விடுதி நடத்திய பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கு திருமதி. ஜான்ஸி ராஜகோபால ராஜு அவர்கள் பரிசுகள் வழங்கியதைத் தொடர்ந்து, திருமதி. கிருஷ்ண ஜோதி அவர்கள் நன்றி நவின்ருர். அன்று மாலை 6 மணி அளவில் கலை நிகழ்ச்சிகள் பல நடைபெற்றன.

## கருத்தரங்கு

திருப்பதி ஸ்ரீஅன்னமாச்சார்யாகலா மந்திரத்தில், தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில், ஜனவரி 17, 18 தேதிகளில், வேதங்களைப்பற்றிய கருத்தரங்கு ஒன்று நடைபெற்றது. 17-1-78 அன்று காலை 8 மணி அளவில் வேதமந்திரங்களுடன் இனிதே தொடங்கப்பெற்ற விழாவிற்கு வருகை புரிந்தோரை தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. எஸ். ராஜகோபால ராஜு அவர்கள் வரவேற்றுப் பேசுகையில், தேவஸ்தானம் ஏற்றுக் கொண்டுள்ள இரு பணிகளான வேதங்களை மொழிபெயர்க்கப்படுதலையும், வேதங்களை பதிவு செய்தல் பற்றியும் விளக்கிப் பேசினுர். மேலும், 'வேதரக்ஷண திட்டம்' ஒன்றினை தேவஸ்தானம் மேற்கொள்ள இருப்பதையும் குறிப்பிட்டார். அடுத்து, இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் செயலாளரான டாக்டர். அர்க்க சோமயாஜி அவர்கள் இக்கருத்தரங்கு பற்றிய அறிக்கையினை வாசித்தபோது, வேதங்களைக் காப்பாற்றும் பணியில் பல்கலைக் கழகங்களும், மாநில அரசுகளும் ஆற்றவேண்டிய கடமையினை எடுத்துக்கூறி. இவ்வகையில் தி. தி. தேவஸ்தானம் யெய்துவரும் சேவையினை குறிப்பிட்டுப் பேசினுர்.

பின்னர் விழாவினைத் தொடக்கி வைத்து உரையாற்றிய முன்னுள் மத்திய அமைச்சர் டாக்டர். கரன்சிங் அவர்கள், காலத்தால் அழியாததும், முடிவில்லாத அருங்கருத்துக்கள் பலவற்றை தன்னகத்தே கொண்டு விளங்குவதும் ஆகிய வேதங்கள் இந்தியக் கலாசாரத்திற்கு ஒரு சின்னமாக விளங்குகிறது என்று கூறி, மனித இனம் உய்ந்திடும் வகையில் வழி காட்டும் அவ்வேதங்களில் பொதிந்து கிடக்கும் மேன்மையான கருத்துக்களை பொது மக்கள் எளிதில் அறிந்து கொள்ளும் வகையில், வேதம் கற்ற பண்டிதர்கள் முயற்சிகள் பல மேற்கொள்ள வேண்டும் என்று அறிஞர்களைக் கேட்டுக் கொண்டார். வடமொழி, இந்திய ஆன்மிக ஒருமைப்பாட்டிற்கு ஒரு சங்கிலியாக விளங்குவதால், அம் மொழியில் உள்ள வேதக் கருத்துக்களை எல்லோரும் அறிந்து தெளிந்து கொள்ளும் வகையில் அம் மொழியையும், வேதங்களையும் காக்கும் விதத்தில், நாட்டின் ஆன்மீக மையமாக திருப்பதி விளங்கிட, தகுந்த ஏற்பாடுகளை சம்பந்தப்பட்டவர்கள் மேற்கொள்ள வேண்டும் என்று குறிப்பிட்டு இதுபோன்ற வளர்ச்சித் திட்டங்கள் செயலாற்றிட, மாநில அல்லது மத்திய அரசுகளின் மேல் ஆதாரப்படாமல், தனியார் சமய அல்லது அறக்கட்டளைகள் உவப்புடன் முன்வரவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். இறுதியில் டாக்டர். கரன்சிங் அவர்கள் சுமார் ஐந்து நிமிடங்கள் வேத மந்திரங்கள் சிலவற்றை உச்சரிப்பு பிசகாமல் மேடையில் ஓதிக் காட்டியது, வேதங்களின் மேல் அவர் கொண்டிருந்த ஈடுபாட்டினை எடுத்துக் கூறிற்று.

அடுத்து, விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய வட மொழிப் பண்டிதர் பத்மபூஷன் பேராசிரியர். வி. ராகவன் அவர்கள் தம்முரையில், வழி வழியாக ஓதப்பட்டுவரும் வேதங்களின் உச்சரிப்பு சிறப்பு அழிந்திடா வண்ணம், வேதங்களை பதிவு செய்யும் வகையில் தேவஸ்தானம் எடுத்துள்ள முயற்சியை மிகவும் பாராட்டி, இந்தியாவின் குறிப்பிட்ட சில பகுதிகளில் வேதங்களின் சில பிரிவுகள் வழி வழியாக பயிலப்பட்டு, அவற்றின் தனிச் சிறப்பு காக்கப்பட்டு வருகின்றன என்றும், ஆனுல் அத்தலைமுறையினர் எண்ணிக்கை காலத்தால் குறைந்து கொண்டே வருவதால், அவர்களை ஊக்குவித்து, அத்தலைமுறையினரைக் காப்பாற்றினுல்தான் வேதங்களின் தனித்தன்மை அழியாது விளங்கும் என்றும், எனவே அதற்குத் தேவையான முயற்சிகளை மேற்கொள்ள அரசும், அறநிலையங்களும் முன்வர வேண்டும் என்று கூறினுர். தொடர்ந்து உரையாற்றுகையில் வேதங்களில் காணப்படும் வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படை அறக்கொள்கைகளை சில மேற்கோள்களுடன் விளக்கிப் பேசினுர். பின்னர் தி. தி. தே. பொறுப்பாண்மைக்குழுத்தலைவர் திரு. சி. அண்ணுராவ் அவர்கள் விழாவில் பங்கேற்றுப் பேசுகையில் திருப்பதியில் வேதங்களைப்பற்றிய ஆராய்ச்சி நிலையம் ஒன்று ஏற்படுத்தப்படும் என்று குறிப்பிட்டார். பிறகு டாக்டர் அர்க்க சோமயாஜி அவர்கள் நன்றி கூறினுர். அன்று மதியமும் அடுத்த நாளும், வேதங்களைப்பற்றிய பல்வேறு தலைப்புக்களில் அறிஞர் பெருமக்களால் ஆராய்ச்சித் தாட்கள் பல படிக்கப்பட்டும், அவற்றைப்பற்றிய விவாதங்களும் நடைபெற்றன.

## அறிவிப்பு

**திருமலையில் இலவச கூட்டு சமூக திருமணங்கள் நிகழ்த்துவதற்கான முகூர்த்த நேர விவரங்கள் பின் வருமாறு :**

| | |
|---|---|
| 3-3-78 | மாக பகுள நவமி, வெள்ளிக்கிழமை காலை 10-8; இரவு 10-50 |
| 10-3-78 | பால்குண சுத்த பாத்யமி, வெள்ளிக்கிழமை இரவு 10-21 |
| 11-3-78 | பால்குண விதியா, சனிக்கிழமை, இரவு 10-18 |
| 12-3-78 | பால்குண த்ருதியா, ஞாயிற்றுக்கிழமை, காலை 9-30 |
| 15-3-78 | பால்குண சஷ்டி, புதன்கிழமை, காலை 9-18 |
| 16-3-78 | பால்குண சப்தமி, வியாழக்கிழமை, காலை 9-18 |
| 30-3-78 | பால்குண சஷ்ட்டி, வியாழக்கிழமை, காலை 9-58 |

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம்.

**குறிப்பு :** 18-12-77 முதல் 25-2-78 வரை நன்முகூர்த்தங்கள் இல்லை.

தொடர் கட்டுரை நவம்பர் மாதத் தொடர்ச்சி

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு. பு. ஸ்ரீ. அனந்த சுப்ரமண்யம்,
சமஸ்கிருத ஆசிரியர்
திருப்பதி.

ஹநுமான் சூரியனுக்கும், இந்திரனுக்கும், தன் தந்தையான வாயுதேவனுக்கும், நான்முகனுக்கும், பஞ்ச பூதங்களுக்கும் வணங்கிவிட்டுப் புறப்படுவதற்கு ஆயத்தமானார். சிரஞ்சீவி வரம் கொடுத்த பிரம்மாவுக்கும், உலகம் பஞ்சபூதங்களின் ஆட்சியில் இருப்பதால் அவைகளுக்கும் நமஸ்கரித்தார். பிறகு கிழக்கு நோக்கி நின்று தன் தந்தையான வாயு பகவானுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுத் தெற்கு திசையை நோக்கித்தன் பார்வையைச் செலுத்தினார். உடனே சிறு உருவத்திலிருந்த ஹநுமான் மாபெரும் உருவம் எடுத்து விருத்தியடைந்தார். ஏனெனில் நூறு யோஜனை தூரமுள்ள சமுத்திரத்தைத்தாண்டுவதற்கு அதற்கான தகுந்த உருவமும், பலமும் இருந்தாலொழிய வெற்றி கிடைக்காது என்ற எண்ணத்தால் விருத்தியடைந்தார். எவ்விதம் பூர்ணிமையில் சந்திரனைக் கண்ட கடல் பொங்கி விருத்தியடையுமோ அதேபோல் இராமரின் பணிக்காக விருத்தியடைந்தார். பின் கால்களாலும் முன் கைகளாலும் மலையை ஓர் அழுத்து அழுத்திப் புறப்பட்டார். அப்பொழுது மலையிலுள்ள மரங்கள், செடிகள், கொடிகள் பிராணிகள்எல்லாம் நடுநடுங்கியும், மிருகங்கள் ஓடவும் ஆரம்பித்தன. மரங்களெல்லாம் பொல பொலவென விழ ஆரம்பித்தன. சமுத்திரமே கலங்கி விட்டது.

"எவ்விதம் இராமனின் அம்புசெல்லுமோ அவ்விதம் போல் நான் சென்று இலங்கையை அடைந்து, சீதையைப் பார்க்காமல்வரமாட்டேன் சீதை இலங்கையில் இல்லையெனில் சுவர்க்கலோகத்திற்குச் சென்று பார்ப்பேன். அங்கும் சீதையைக் காணவில்லையென்றால் இராவணனைக் கட்டி இழுத்து வருவேன். அவ்விதம் முடியவில்லையென்றால் இராவணனோடு இலங்கையைத் தூக்கி வந்து விடுவேன் எப்படியாவது பணியை முடித்துக் கொண்டு திரும்பி வருவேன். முடிக்காமல் வரமாட்டேன்" என்று கூறிக் கொண்டே ஹநுமான் வேகமாக பறந்து சென்று கொண்டிருக்கும் பொழுது, சமுத்திரராஜன் தன்னிடம் மறைந்து வாசம் செய்யும் மைநாகம் என்ற மலையைத் தூண்டி விட்டு, "மைநாகமே! ஹநுமான் இராமனின் காரியமாகக் இலங்கையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறான். நீ அவரை உன்னிடம் தங்கி போகும்படி கூறு' என்று கூறினான். அதைக் கேட்ட மைநாகம் தன் சிகரத்தைத் தூக்கி நிமிர ஹநுமான் அச்சிகரத்தைத் தன் மார்பினால் ஓர் அழுத்து அழுத்திவிட்டு போய்க் கொண்டே இருந்தான். மைநாகம் மனித உருவங்கொண்டு தன் வரலாற்றைக் கூறியது.

**मानुषं धारयन्रूपं आत्मनः शिखरे स्थितः ।**
**निपत्य मम शृङ्गेषु विश्रमस्व यथासुखम् ॥**

இக்கருத்தையே கம்பர் கீழ்வருமாறு கூறுகிறார்.

"உந்தா முன் உலைந்து உயர்வேலை
ஒளித்ததுன்றம்
சிந்தாகுல முற்றது பின்னருந்
தீர்வில் என் பால்
வந்து ஓங்கி, ஆண்டு ஓர் சிறு
மானுட வேடம் ஆகி
எந்தாய் இதுகேள் எனஇன்ன
இசைத்தது என்றே "

மைநாகத்தைப் பார்த்துச் சமாதானம் கூறிவிட்டுச் செல்லுகிறான் ஹநுமான். என்ன கூறினான்?

"நண்ப! உன் விருந்தோம்பலால் மகிழ்ச்சியடைந்தேன். கோபப்படாதே. என் பணி காலதாமதமாகிறது. மேலும் பகல் ஓடிக்கொண்டிருக்கிறது. நான் துரிதமாகச் செல்லவேண்டும். பிரதிக்ஞையை நிறைவேற்றவேண்டும்' என்று கூறிக் கொண்டே மறைந்து விட்டார். இதற்கிடையில் மைநாகத்தைப் பார்த்து இந்திரன் கூறுகிறான்.

"ஹே! மைநாகமே!. உன் செயலுக்கு மெச்சினேன். உனக்கு அபயமளிக்கிறேன். உனக்கு எவ்வித ஆபத்தும் வராது. இங்கேயே வசித்து வா" என்று. மைநாகத்திற்கும் இந்திரனுக்கும் தொடர்பு உண்டு. ஒரு காலத்தில் இந்திரன் இறக்கைகளைக்கொண்ட மலைகளின் இறக்கைகளை வெட்டி வீழ்த்தினான். அப்பொழுது பயந்து ஓடி வந்து கடலில் ஒளிந்து கொண்டது மைநாகம். ஆகையால் மறுபடியும் பயந்து ஓடிவிடக்கூடாது என்பதால் மைநாகத்திற்கு அபயமளித்தான். ஹநுமான் சென்று கொண்டிருக்கும் பொழுது தேவர்கள் ஸுரஸை என்ற நாகமாதாவை ஏவி ஹநுமானின் வேகத்தைத் தடைசெய்ய வேண்டுகிறார்கள். கம்பர், வால்மீகி, இருவரும் மைநாக விருத்தாந்தத்தை முதலிலும், ஸுரஸையின் விருத்தாந்தத்தைப்பின்பும் கூறுகிறார்கள். துளசிதாஸர் முதலில் ஸுரஸை விருத்தாந்தத்தையும் பின் மைநாக விருத்தாந்தத்தையும் கூறுகிறார்.

இந்திரனின் வரலாறு கம்பராமாயணத்தில் காணப்படவில்லை ஹநுமான் கடலைக் கடந்து அக்கரையிலிருந்து இலங்கையின் தோற்றத்தைப் பார்த்து வியப்பு அடைகிறான்.

"யுத்தம் செய்யாமல் தேவர்களால் கூட இலங்கையை அடையமுடியாது. அத்தகைய இலங்கையில் சீதை எங்கு இருக்கிறாளோ! ஜீவித்திருப்பாளோ? மாட்டாளோ" என்று யோசித்து விட்டு, இனி இலங்கையில் இந்த உருவத்தோடு போனால் காரியம் நடைபெறாமல் போகலாம், ஆகையால் சிறிய உருவங்கொண்டு தெரிந்தும் தெரியாமலும் இரவில் செல்லவேண்டும் என்று புறப்பட்டார். (தொடரும்)

# ராசி பலன் (1-2-78 முதல் 28-2-78 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.



மேஷம் :

[அசுவனி பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய]

பொருள் லாபம் பெற்றாலும், தீய நண்பர்களால் கெடுதி ஏற்படல், வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதிப் படல், நன் முயற்சிகள் தோல்வியடை தல், கருத்து வேறுபாடுகள், தன் பிள்ளைகளாலும், பெண்களாலும் மன யமைதியின்மை.



ரிஷபம் :

[கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]

தன் பிள்ளைகளால் லாபம், புதியன வாங்குதல் தன் உற்றார் உறவினர் களுடன் பிரிவு.



மிதுனம் :

[மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய].

புதியன வாங்குதல், புதிய வாகனங் கள் வாங்கப்பெறல், வெற்றி, உடல் நலமேன்மை ஆனால் கருத்து வேறு பாடுகள், எதிரிகளால் கெடுதி ஏற் படல், உயர் அதிகாரிகளின் கோபத் திற்குள்ளாதல்.



கடகம் :

[புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]

மனையமைதியின்மை, நஷ்டம், ஏமாற்றங்களுக்குள்ளாதல். முயற்சி கள் தோல்வியடைதல்.



சிம்மம் :

[மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய].

பொருள் நஷ்டம், மனைவிக்கு மன யமைதியின்மை, உற்றார் உறவினர்க ளுடன் பிரிவு, ஆனால் இறுதியில் லாபம் மற்றும் நன்மை.



கன்னி :

[உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய].

நன்மை தீமை, லாபம் நஷ்டம் சமமாக இருக்கும். மாதத்தின் முதல் 15 நாட்களுக்கு லாபம், புதிய நண்பர் கள், புதிய உறவுகள்.



துலா :

[சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம்முடிய]

லாபம், பெண்களால் நன்மை, மக் கட்பேறு, தானியவகைகள் கிடைக் கப் பெறல், மகிழ்ச்சி.



விருச்சிகம் :

[விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய]

மாதத்தில் முதல் 15 நாட்களின் போது லாபம், புதிய நண்பர்கள், மகிழ்ச்சி, ஆனால் இறுதி 15 நாட்க ளின் போது அவமானத்திற்குள்ளா தல், உடல் நலமின்மை, நஷ்டம்.



தனுசு :

[மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய].

லாபம், நல்விருந்து, மகிழ்ச்சிக்குரிய சூழ்நிலை, ஆனால் எதிரிகளால் துன்பம் ஏற்படுதல், தீய நடவடிக்கைகளுக் குள்ளாதலும் அதனால் அவமானப்படு தலும்.



மகரம் :

[உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய].

மனைவியால் கருத்து வேறுபாடு களுக்குள்ளாதல், வயிறு அல்லது கண் சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதிப் படல், உற்றார் உறவினருடன் பிரிவு, அதனால் மன மகிழ்ச்சியின்மை, தீய நடவடிக்கைகளுக்கு உள்ளாதற்குரிய சூழ்நிலை ஏற்படல்.



கும்பம் :

[அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி, 3-ம் பாதம் முடிய]

லாபம், வெற்றி, புதிய ஆடை ஆப ரணங்கள் கிடைக்கப்பெறல், குழந் தைப்பேறு மற்றும் புதிய வாகனங்கள் கிடைக்கப்பெறல், அவ்வப்போது பிர யாணம் மேற்கொளல்.



மீனம் :

[பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய].

லாபம், வெற்றி, ஆனால் சிறிது உடல் நலம் கெடுதல், தன் மக்களால் மனயமைதி கெடல்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501




திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்) கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்) பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்தரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2000 |
| திருப்பாவாடை | ,, | 4000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2000 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 450 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 225 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்குழல் | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கர்ப்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

Regd. No. H/TRP/12 தனிப்பிரதி 50 காசு

## திருப்பதிக்கு . . . வருகை புரியுங்கள் !



# ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயில் பிரம்மோற்சவம்

### உற்சவ விவரங்கள்

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 4-4-78 | செவ்வாய் | —— | சேனாதிபதி உற்சவம் அங்குரார்ப்பணம் |
| 5-4-78 | புதன் | திருச்சிஉற்சவம் துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாஹனம் |
| 6-4-78 | வியாழன் | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 7-4-78 | வெள்ளி | முத்துப்பந்தல் வாஹனம் | ஸிம்ஹ வாஹனம் |
| 8-4-78 | சனி | கல்பவிருக்ஷ வாஹனம் | சர்வபூபால வாஹனம் |
| 9-4-78 | ஞாயிறு | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாஹனம் |
| 10-4-78 | திங்கள் | ஹனுமந்த வாஹனம் (மாலை-வசந்தோற்சவம்) | கஜ வாஹனம் |
| 11-4-78 | செவ்வாய் | ஸூர்யப்பிரபை வாஹனம் | சந்திரப்பிரபை வாஹனம் |
| 12-4-78 | புதன் | ரதோற்சவம் | குதிரை வாஹனம் |
| 13-4-78 | வியாழன் | பல்லக்கு உற்வசம், தீர்த்தவாரி அவப்பிரதோற்சவம் | திருச்சியில் துவஜாவரோஹணம் |

இவ்விழா நாட்களின் போது மாலை நேரங்களில் ஊஞ்சல் சேவை நடைபெறும்.